# செந்தமிழ்ச் செல்வி



சிலம்பு-௫௯ தி. வ. ஆண்டு-௨0௧௬ வைகாசி பரல்-௧0

சூன் 1985

"செந்தமிழ்ச் செல்வி"

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

# உள்ளுறை

# செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

சிலம்பு-டுகூ தி. வ. ஆண்டு உ0கசு, வைகாசி பரல்-க0

சூன் 1985

---

## தெய்வச் சேக்கிழார் திருநாள்

சைவ சமயக் காப்பியமான திருத்தொண்டர்மாக்கதை என்னும் பெரியபுராணத்தையும், அதன் இலக்கிய நயத்தையும், பத்திச்சுவை நனிசொட்டச் சொட்ட உருவாக்கப்பெற்ற அதன் மாண்பினையும் எண்ணிப் பார்க்கின்ற எவரும் சேக்கிழார் பெருமானைப் போற்ருதிருக்க இயலாது.

இத்தகைய சமய, இலக்கியப் பேராசிரியருக்கு ஆண்டுதோறும் சைவ மடங்களும், அவைகளும், மன்றங்களும் விழா எடுத்து வந்தன—வருகின்றன. சிறப்பாகக் குன்றத்தூரில் சேக்கிழார் மன்றத்தாரால் ஆண்டுதோறும் நடைபெற்று வரும் இவ் விழாவைப் பற்றிச் சைவ நன்மக்கள் நன்கு அறிவர்.

எதையும் தனிப்பட்டோர் செய்வதைவிட அரசாங்கமே செய்ய முன்வருதல் பல்லாற்ருனும் சிறப்புடையதன்ரே? அவ்வகையில், இவ்வாண்டு தமிழக அரசு சேக்கிழார் பெருமானுக்குச் சீருஞ் சிறப்புமாக இவ் விழாவினை நடத்தியிருப்பது குறித்துப் பெருமகிழ்ச்சியடைகிரேம்,

இவ் விழா இதுவரை வரலாறு காணுததாக, சேக்கிழார் பெருமானுக்கு இதுவரை யாரும் எடுக்காத வகையில் அமைந்திருந்தது. மயிலை வீதிகளில் அமைக்கப்பெற்ற அலங்கார வளைவுகளும் வண்ண வண்ண விளக்குகளும் விழாவிற்குப் பொலிவூட்டின. விழாக்கூடமும் மேடையும் மிக அழகிய முறையில் அலங்கரிக்கப்பெற்றிருந்தன. சைவப்பெருமக்கள் பெருந் திரளாக ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் கலந்துகொள்ளும் வகையில் சொற்பொழிவுகள் சிறப்பாக அமைந்திருந்தன,

பெரியபுராண சமயநூற் பதிப்புகளின் காட்சியைச் சைவ சித்தாந்தக் கழகம் விழாக் கூடத்தில் ஏற்பாடு செய்திருந்தது.

தமிழகத்தில் ஒரு காலத்தில் சமய சாத்திரங்களுக்கு எதிர்ப்பு தெரிவித்து வந்த சீர்திருத்த இயக்கத்தின் வழிவந்த அன்பர்கள் இப்போது சீர்திருந்திப் பெரியபுராணம், கம்பராமாயணம் போன்ற இலக்கியங்களையும், அவற்றின் ஆசிரியர்களான சேக்கிழார், கம்பர் போன்றவர்களையும் பாராட்டவும் விழா எடுக்கவும் முன்வந்திருப்பது சமய அன்பர்களின் பாராட்டுகளுக்கு உரிய செயல்களாகும்.

புறச் சமய இலக்கியங்களும், ஆரியக் கட்டுக்கதைகளுமே தமிழகத்தை ஆட்கொண்டிருந்த நிலையில் பத்தியையும் இலக்கியச் சுவையினையும் மக்களிடையே பரப்ப, பெரியபுராணம் என்னும் பேரிலக்கியத்தை உருவாக்கிய சேக்கிழார் பெருமானை எத்துணை பாராட்டினும் தகும். இதுபற்றியே மறைத்திரு மறைமலையடிகளார் பெரிய புராணத்தைப் பெரிதும் போற்றி வந்தார்.

பல்வேறு சாதிகளால் வேற்றுமையின் நிலைக்களனாயிருந்த தமிழகத்தில் பத்தி ஒன்றினையே குறிக்கோளாகக் கொண்டு, அவ் வேற்றுமைகளை இருக்குமிடந் தெரியாமற் செய்த பெருமை சேக்கிழார் பெருமானுக்கே உண்டு. ஓர் அரசின் அமைச்சராக இருந்த சேக்கிழார் அதே நேரத்தில் இலக்கிய ஆசானாகவும் சாதிவேறுபாடுகள் அற்ற ஒரு சமுதாயத்தை உருவாக்கிய சீர்திருத்தச் செம்மலாகவும் விளங்கினார் எனில் மிகையன்று.

இத்தகைய சமயப் பெரியாருக்குத் தமிழக அரசின் அறநிலையத் துறையினர் சீரும் சிறப்புமாகக் கடந்த மே- திங்கள் 25, 26ஆம் நாட்களில் மயிலைக் கபாலீசுவரர் கற்பகாம்பாள் திருமண மண்ட பத்தில் விழா எடுத்திருக்கிறார்கள். சிலம்புச் செல்வர் டாக்டர் ம. பொ. சிவஞானம் அவர்களின் அரிய தலைமை உரையும், மற்றும் முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின் சிறப்புரையும், சமயச் சான்றோர்க்குப் பாராட்டு வழங்கிய மாண்புமிகு அமைச்சர் வீரப்பனார் உரையும் சேக்கிழார் பெருமையினை நாட்டின் மூலை முடுக்கெல்லாம் பரவச்செய்யும் பாங்கினை அறிந்து மகிழ்கின்றோம்.

மற்றும் சமயத் தலைவர்களும், தமிழ்ப் பேராசிரியர்களும், கலைமாமணிகளும் இவ் விழாவில் பங்குகொண்டு உரையாற்றி யுள்ளனர். இவ் விழாவின் தொடர்பாக இசை நிகழ்ச்சிகளும், கலை நிகழ்ச்சிகளும் நடைபெற்றுள்ளன. சுருங்கச் சொல்ல வேண்டு மானால் தெய்வச் சேக்கிழார் திருநாள் விழா எந்த ஆண்டுமில்லாத

அளவுக்கு ஒரு சமய மாநாடு போலவே நடைபெற்றிருக்கிறது எனலாம்.

சேக்கிழார் பெருமானுக்குச் சென்னைமாநகரில் மட்டுமல்லாது மாவட்டங்கள் தோறும் விழா வெடுக்க வேண்டுமென்று தமிழக மேலவைத் தலைவர் சிலம்புச் செல்வர் டாக்டர். ம. பொ, சிவஞானம் அவர்கள் கூறியிருப்பது செயல்படுத்த வேண்டிய ஒன்றாகும்.

தொண்டர்தம் பெருமையையும் அவர் தம் தொண்டின் சீர்மையையும் திறம்பட எடுத்துக் கூறிய சேக்கிழாருக்குத் தமிழ்நாட்டில் தகுந்த இடத்தில் கோட்டம் ஒன்று 'சேக்கிழார் கோட்டம்' என்ற பெயரில் தமிழக அரசால் அமைக்கப்பெறும் எனறு மாண்புமிகு அறநிலைய அமைச்சர் ஆர், எம். வீரப்பன் அவர்கள் அறிவித்துள்ளது போற்றத்தக்கதும் வரவேற்கத்தக்கதுமாகும்.

இங்ஙனம் சேக்கிழாருக்கும், பெரியபுராணத்திற்கும் பெருமை சேர்த்த மாண்புமிகு புரட்சித் தலைவர் தமிழக முதல்வர் டாக்டர் எம். ஜி. ஆர். அவர்களின் தலைமையிலமைந்த தமிழக அரசுக்கும் தமிழக அரசின் அறநிலையத்துறையினர்க்கும் குறிப்பாக அத்துறை அமைச்சர் மாண்புமிகு வீரப்பனார் அவர்கட்கும், அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் உயர்திரு கு, ஆளுடைய பிள்ளை இ. ஆ. ப. அவர்கட்கும் எமது பாராட்டுதலையும நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

வாழ்க சேக்கிழார் பெருமான் புகழ்! வளர்க தொண்டர்தம் பெருமை,

''காக்க நம்பி யாரூரர்
கவினுர் திருத்தொண் டத்தொகைக்குக்
காரார் சோலை நாரையூர்க்
கரிமா முகத்தோன் பொருளுரைக்க
ஆக்க மெழுபத் தின்மூவர்
அணிசேர் கதையெல் லாமடக்கி
அறைந்த நம்பி யந்தாதி
அரிய சிற்றம் பலத்துள்ளே
தூக்கும் பதத்தோன் திருவாக்குத்
தோன்ற உலகெல் லாமென்று
சொல்ல வெல்லா மறிந்துதிருத்
தொண்டர் புராணம் விரித்துரைத்த
சேக்கிழார்''

—க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ்

# அயல்புடைய மூவர்

## [கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்]

தாய், தந்தை, துணை என்பவர்களே இயல்புடைய மூவர் என்பதை முன் இதழில் கண்டோம். அயல்புடைய மூவர் இவர் என்பதை வள்ளுவரே சுட்டியுள்ளார், ஆனால் பொருள் காணுதலில் 'அம்மூவரும் எவர்' என்பது சிக்கற்பட்டுள்ளது. வள்ளுவர் வாய் மொழி தெளிவாகவே உள்ளது. மனம் போல் பொருள் காணலில் நேர்ந்துள்ள சிக்கல்களே அவை என்பது வெளிப்படுகின்றது,

> "துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
> இல்வாழ்வான் என்பான் துணை"

என்பது அயல்புடைய மூவரைச் சுட்டும் குறள்.

இவண் 'துணை' என்பதை எண்ணவேண்டும். இயல்புடைய மூவர்க்கு 'நல்லாற்றின் நின்ற துணை' என்றதையும் இவ்வயல் புடைய மூவர்க்கு வாளா 'துணை' என்றதையும் எண்ணுதல் வேண்டும்,

துணை என்பதன் பொருள் என்ன? இரண்டு என்பதே பொருள். இருபொருள் இணைவே துணை எனப்படும். 'துணையடி நீழல்' என்பதை எண்ணுக. 'அஞ்சாமல் தனிவழியே போகவேண்டாம்' என்பதையும் 'துணையோடல்லது நெடுவழி ஏகேல்' என்பதையும் இணைத்துக் காண்க,

துணை போன்றதே 'இணை' என்பதையும், 'பிணை,' 'புணை' என்பவையும் அவற்றின்வழி வந்தனவே என்பதையும் கருதிப் பார்க்க.

துணையுள் 'சொற்றுணை' என்பதொன்று. அதனை 'நாத்துணை' என்றும் கூறுவர். நாத்துணையாக இருக்கும் நங்கை 'நாத்துணையாள்' (நாத்தினுள்) என வழங்கப்பெறுவதும் அறிக. நாத்துணை நங்கையை இளங்கோவடிகளார் 'நாத்தூண் நங்கை' என்பார்.

இனி வழித்துணை, மனத்துணை, துயர்த்துணை, வாழ்க்கைத் துணை என்னும் துணைகள் எல்லாம் இணைகள் என்பது வெளிப் படையே. 'கடவுள் துணை' என்பதில் கடவுளைத் துணையாகக் கருதுதல் வெளிப்படை. ஆனால் கடவுளுக்கு நாம் துணையோ எனின் இல்லையாம். அதனால் அங்குத் துணை என்பது இணை என்னும் பொருளில் நீங்கி வழிப்பொருளாக அருளின்மேல் நின்றது.

துணை என்னும் சொற்பொருளை நுண்ணிதின் நோக்கினால் வள்ளுவர் கூறும் துறந்தார் முதலிய மூவரும் உயிரோடு இருப்பவர்; துணையாய்-துணைக்குத் துணையாய்-உதவிபெறுபவராய் அமைபவர் என்பது வெளிப்படும். வெளிப்பட, 'இறந்தார்' என்பதற்கு 'உயிர் நீத்தவர்' என்னும் பொருள் பொருந்தாமை உணரப்படும். 'இறந்தார்' என்பவரும் 'இருப்பவரே' என்பதும் வெளிப்படும்.

'தீரத் துறந்தார்,' 'பற்றினைப் பற்றி விடாதவர்' என்று துறவில் கூறப்படுபவரே துறந்தார்.

தமிழ்நெறியை விடுத்து அயல்நெறிக்கு ஆட்பட்டு உரை கண்டதாலேயே பரிமேலழகர் ''களைகண் ஆனவரால் துறக்கப் பட்டார்'' என்று உரை கூறினார். இயல்புடைய மூவர்க்குப் 'பிரம சரியன், வானப்பிரத்தன், சந்நியாசன்' என்பவரைக் குறித்துவிட் டமையால் 'துறந்தார்' என்பதற்கு நேர் பொருள் காணமல் வேறு பொருள் காட்டினார். பிறரும், 'வருணத்தினையும் நாமத்தினையும் துறந்தார்' 'மண் பெண் பொன் இந்த மூவகை ஆசையைத் துறந் தார்' ஒருதியம் அற்றதால் உடன் துறந்தார், 'கடவுளைப் பற்றி நாணினைத் துறந்தார்' குடிப்பிறந்தாரால் ஓரோர் காரணத்தினால் வெகுண்டு துறக்கப்பட்டார்' எனப் பலப்பல கூறினர்.

இனித், துவ்வாதவர் என்பது சிக்கலற்றது, 'துன்புறூஉம் துவ்வாமை' என்பார் வள்ளுவர். துவ்வாமை உண்ணாமை; உண்ணுதற்கு வாய்ப்பு இன்மை; அஃதாவது வறுமை.

''இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு''

என வருந்தி வகையற்று இல்லத்தில் ஒடுங்கிக் கிடக்கும் வறியரே 'துவ்வா தவர்' என்க.

இறந்தார் என்பதற்கு, ''ஒருவருமின்றித் தன்பால் வந்து இறந்தவர்'' என்று உரை கூறி, ''இறந்தார்க்கு நீர்க்கடன் முதலிய செய்து நல்லுலகின்கண் செலுத்துதலை'' விளக்கினார் பரிமேலழகர். அதனால் பழையவுரைகளுடன் புத்துரைகளுள் சிலவும் இவ்வுரை யையும் விளக்கத்தையும் மேற்கொண்டு இயல்கின்றன. இறந் தார்க்கு எப்படி இருப்பவர் துணையாகக் கூடும்? இறந்தார்க்குச் செய்யும் கடன்கள் 'கடன்களே' அன்றித் 'துணை' என்பதாமோ?

அதனால், ''கல்வியினால் மிக்கோர், வறுமையைக் கடந்து மிக்க செல்வத்தை உடையார், குடும்பத்தை விட்டுக் கடந்தவர், யாருமற்றவர், தாமாக வாழ முடியாத இளையரும் முதியரும், அளவு கடந்த வாழ்க்கை நடத்திக் கெட்டுப் போனவர்'' என உயிரோடு இருப்பவர்களைச் சுட்டினர் முன்னும் பின்னும் உரைகண்டோர்கள்.

'இறந்தார்' என்பதற்குச் சொற்பொருள் காணில் தெளிவாம். 'இல்லிறப்பான்' (146) என்னும் சொல்லாட்சி திருக்குறளில் உள்ளது. அதன் பொருள் 'இல்லத்தைக் கடத்தல்' என்பதாம். இறத்தல் என்பதற்கு எட்டாமல் போதல், கழிதல், சாதல், நெறி கடந்து செல்லல், மிகுதல், நீங்குதல் ஆகிய பொருள்களை அகர முதலிகள் தரும். இவை யெல்லாம் நீங்கல் பொருளில் வருவனவே. வீட்டுத் தாழ்வாரத்தில் சுவரைக் கடந்த பகுதிக்கு 'இறப்பு' என்பதும் 'இறைவாரம்' (இறவாரம்) என்பதும் பெயராக இருத்தல் அறிக. 'ஏட்டைக் கட்டி இறவாரத்தில் வை' என்னும் பழமொழியும் நினைக. ஆகலின் ஊணின்றி வறியராய் வீட்டை விட்டு வெளியேறியவர் 'இறந்தார்' எனப் பெற்றனராம்.

துவ்வாதார், ஊணின்றி இல்லகத்திருக்கும் மானம் போற்றும் வறியர் என்றும், இறந்தார் இல்லகம் கடந்து ஊணுக்காகப் பிறர் உதவி நோக்கி வெளிப்பட்டவர் என்றும் பொருள் கொள்க.

"இருக்கும் இடந்தேடி வந்து என்பசிக்கு
எடுத்து இடுவோர் உண்டென்றால் உண்பேன்"

என்னும் பட்டினத்தார் போலும் துறவியர் முதலாமவர்.

பொங்கிய பானையில் சோற்றுப் பொறுக்குக் காணுமல் வாய் விட்டு அழும் குழவியை அமர்த்த 'மறப்புலி உரைத்தும், மதியம் காட்டியும்' வெதும்பி வீட்டுள் அடைந்து கிடக்கும் தாயையும் மக்களையும் உடைய கழகப் பெருஞ்சித்திரனுர் அனையர் இரண்டாமவர்.

பெற்றவராலோ, பிள்ளைகளாலோ, உடன் பிறப்புகளாலோ, ஆள்வோராலோ, அயலாராலோ புறக்கணிக்கப்பட்டும், வெருட்டப் பட்டும், அலைக்கழிக்கப்பட்டும், வறுமைப்பட்டும் இல்லகங் கடந்து இரவா இரப்பாளராய் வருபவர் மூன்றுமவர்.

இம் மூவர் இயலும் நிலையும் சூழலும் தேவையும் வேறு வேறனவை யாகலின், தனித்தனி எண்ணினர். துறந்தார் ஊணிலா வறியர், பேணுவாரின்றி வெளிப்பட்டார் என்னும் மூவரே துறந்தார், துவ்வாதார், இறந்தார் என்க.

———

## ஒற்றுமைக்கு வழி

ஒரு நாடு ஓர் இனம் என்ற மனப்பான்மை இருந்தால்தான் ஒரு நாட்டின் மக்கள் ஒன்றுபட முடியும், ஒன்றுபட்டு நாட்டு முன்னேற்றத்திற்குப் பாடுபடமுடியும்.

—டாக்டர் மு. வரதராசனர்

# பத்திநெறியும் பண்டை வேதநெறியும்

[பேராசிரியர். மா சண்முகசுப்பிரமணியம்]

பத்திநெறி பரப்பிய திருஞானசம்பந்தர் மதுரையில் சமணர்களை வாதிலே வென்றார் என்று வரலாறு கூறுகின்றது.

சமணத்தை ஏன் பத்திநெறி பரவிய மெய்யடியார்கள் ஏற்கவில்லை?

**நாத்திகத்தைச் சாடிய நன்னெறி :**

அன்புநெறி என்ற பத்திநெறிக்கும் அமணர்களின் நெறிக்கும் ஏற்பட்ட பிணக்கு இரு சமயங்களிடையே தோன்றிய பூசலா?

இந்த இடத்தில், ''சமயம்'' என்றால் என்ன என்று நாம் சிறிது சிந்திக்க வேண்டும்.

எங்குமாய் எல்லாமாய் என்றுமாய் உள்ள உண்மைப் பொருள் ஒன்று உண்டு என்ற உணர்வுதான் சமயங்கள் அனைத்திற்கும் அடிப்படையாக உள்ளது. இதையே இறையுணர்வு என்கிறோம். இறையுணர்வு இன்றி எந்த மதமும் இல்லை.

சமணநெறியில் இறையுணர்வுக்கு இடமில்லை என்பதே பொதுவான கருத்தாகும். இறைமை நம்பிக்கை இல்லாத ஒரு நெறியினைச் சமயநெறி என்று கூறுதல் பொருந்தாது. எனவே, சமணத்தை ஒரு சமயநெறியாக நாம் கொள்ளுவதற்கில்லை.

ஆதலால், சைவநெறிக்கும் சமணநெறிக்கும் இடையில் எழுந்த மோதல், ஒரு சமயநெறிக்கும் இறைமையுணர்வு இல்லாத மற்றொரு நெறிக்கும் ஏற்பட்ட மோதலேயாகும். அஃது ஆத்திகத்திற்கும் நாத்திகத்திற்கும் இடையில் எழுந்த மோதல்.

இந்த உண்மையினை ஞானசம்பந்தரின் வாக்கிலேயே நாம் காணுகின்றோம்:

''ஈசன் எமையாளுடைய எந்தை
பெருமான் இறைவனென்று தனையே
பேசுதல் செயா அமணர் புத்தரவர்
சித்த மணையா அவனிடம்
...................''

(திருவைகாவூர்—10)

"எங்கும் நிறைந்து எல்லாரையும் ஆட்கொள்ளும் எந்தை பெருமான் இறைவனைப்பற்றிப் பேசாத அமணர்கள், புத்தர்கள்"— என்றுதான் சமணர்களையும் புத்தர்களையும் சாடுகின்றார் சம்பந்தர்.

இறைவனை ஏற்காத நெறிகளைச் சாடிய மெய்யடியார்கள், இறைவனைப் போற்றும் அறுவகைச் சமயங்களையும், பல்வேறு தெய்வங்களைத் துதிக்கும் வேதங்களையும் வேள்விகளையும் ஆதரித்தனர். எனவேதான்,

"அருகரொடு புத்தரவர் அறியா அரன்"

(திருமுதுகுன்றம்-10)

ஆகிய இறைவன்,

"வேதமாய் வேள்வியாகி விளங்கும் பொருள்"

(திருச்சாத்த மங்கை-6)

என்று பாடுகின்றார். சமணர்களும் புத்தர்களும் அறியாத அரன் வேதமாய் வேள்வியாகி விளங்கும் பொருளாவான், என்று அமணரைச் சாடி, அருமறைகளைப் போற்றுகின்றார் சம்பந்தர்.

இவ்வாறு, இறையுணர்வு இல்லாத நாத்திக நெறிகளான சமணமும் பௌத்தமும் பழிக்கப்படும் பொழுது, ஆத்திக நெறிகளனைத்தும் பாராட்டப்பெறுகின்றன. ஆத்திகத்தின் ஆதிக் குரலான வேதங்கள் போற்றப்படுகின்றன.

ஆதலால்தான், பத்தி நெறி பரவும் நாயன்மார்களும் ஆழ்வார்களும், இறைவனை,

"வேத நாயகன்" என்றும்,

"வேதியர் நாயகன்" என்றும்,

"மறையவன்" என்றும் பலவாருகப் போற்றுகின்றனர்.

ஆனால், இறைவன் நான்கு வேதங்களுக்கும் அப்பாற்பட்டவன் என்பதையும், நான்மறைகளாலும் எய்த முடியாதவன் என்பதையும், பத்தி நெறி ஒன்றுல் மட்டுமே பரமனை எய்த இயலும் என்பதையும் மிகவும் தெளிவாக நமக்கு உணர்த்துகின்றனர் மெய்யடியார்கள்.

## வேதங்களைக் கடந்த விழுப் பொருள் :

திருமுறைகளிலும் திவ்யப் பிரபந்தங்களிலும் இறைமைத் தத்துவம் இணையற்ற முறையில் இசைக்கப்பெற்றுள்ளது. இறைவனை இதயத்தில் இசைத்து இன்னுயிர்கள் எல்லையில்லாத இன்பத்தையும் ஏற்றத்தையும் எய்துவதற்கான அன்புநெறியினைக் கூறும் அருந்தமிழ்நெறி,

''உருகிநைபவர்க்கு அல்லால் ஒன்றும் கைகூடுவதன்றால்''
(சம்பந்தர்—திருநெல்வாயில் அரத்துறை)

என்ற உண்மையினை ஓயாது உணர்த்துகிறது.

அன்பினாலன்றி, நால்வேதங்களாலும் அறியவொண்ணாதவன் இறைவன் என்று பாடுகின்றார் தமிழ் ஞான சம்பந்தர்:

''......விரும்பு நால் வேதத்தாலும் அறிவொண்ணா
நடைதெளியப் பளிங்கே போல் அரிவைபாகம்......''
(திருமுதுகுன்றம்)

''உள்குவார் உள்ளத்தானை, உணர்வெனும் பெருமையானை''
(நாவுக்கரசர்-பொது)

ஓதும் வேதங்களால் உணர்தல் அரிது என்று நாவுக்கரசர் நவில்கின்றார். நான்கு வேதங்களுக்கும் அப்பாற்பட்டு நிற்பவன் இறைவன் என்கிறார்:

''நசையானை நால்வேதத் தப்பாலானை......''
(திருவானைக்கா)

''அருளானை ஆதிமாதவத்துளானை ஆறங்கம்
நால்வேதத் தப்பால் நின்ற
பொருளானை......''
(திருப்புள்ளிருக்கு வேளூர்)

நால்வேதங்களால் அணுகவும் முடியாதவன் இறைவன் என்று பாடுகின்றார்.

''நல்லானை, நரை விடையொன் றூர்தியானை,
நால்வேதத்து ஆறங்கம் அணுகமாட்டாச்
சொல்லானை......''
(திருக்கீழ் வேளூர்)

இறைவன் மறைகளால் போற்றப்படுகிறவன்; எனவே அவன் ''மறையான்'' என்றும், அவன் மறைகளால் அறியவொண்ணாதவன் என்றும் விளக்குகின்றார் அடிகள்:

''மறையானை, மறையாலும் அறியவொண்ணாக்
கலையானை,......''
(திருவோமாம்புலியூர்)

இறைவனின் இணையடிகளின் தன்மையினை அறியாது நான் மறைகள் ஒன்றுக்கொன்று முரண்பட்டு நிற்கின்றன என்கிறார்:

"......மன்னுமறைகள் தம்மில்
பிணங்கி நின்று இன்னன என்று அறியாதன
......இன்னம்பரான்றன் இணையடியே."

(திரு இன்னம்பர்)

வேதங்களை ஓதியும் பயனில்லை, வேள்விகள் செய்தும் பயனில்லை. நீதி நூல்களை நித்தம் பயின்றாலும், ஆறு அங்கங்களைக் கொண்ட சாத்திரங்களை உணர்ந்தாலும் பயனேதும் இல்லை. உள்ளம் உருகி இறைவனை உள்கினால்தான் ஈசனை எய்த இயலும், என்று உறுதிப்பட உரைக்கின்றார் அப்பர் பெருமான்:

"வேதம் ஓதிலென், வேள்விகள் செய்கிலென்,
நீதி நூல்பல நித்தம் பயிற்றிலென்,
ஓதி யங்கமோர் ஆறும் உணரிலென்,
ஈசனை உள்கு வார்க்கன்றி இல்லையே."

(பொது)

மாமறைகள் அறியா மலர்ப்பாதம்

அன்பிலாலந்துறை என்ற தலத்திலே எழுந்தருளி இருக்கும் இறைவனை, உள்ளம் உருகும் அன்பினால் நினைப்பவர்கள் மட்டுமே அறிவார்கள், என்று உணர்த்துகின்றார் அப்பர்:

"அன்பிலானை அம்மானை அள்ளூறிய
அன்பினால் நினைந்தார் அறிந்தார்களே"

(திரு அன்பிலாலந்துறை)

இதனை ஒலிக்கும் மணிவாசகத்தின் வரிகள் :

"யாவர் ஆயினும், அன்பர் அன்றி
அறியொணா மலர்ச் சோதியான்."

(42-1)

அன்பினால் அறியப்பெறும் மலர்ச் சோதியானின் மலர்ப் பாதங்களை மாமறைகள் அறிய மாட்டா என்கிறார் மணிவாசகர்:

"மாமறையும் அறியா மலர்ப்பாதம் "

(49-4)

பண்டைய நான்மறைகளும் இறைவன்பால் அணுக முடிவதில்லை என்கிறார்:

"பண்டு ஆய நான்மறையும் பால் அணுகா."

(48-1)

மறையோனான இறைவனை மறைகள் அறியமாட்டா என்று தெளிவாகக் கூறுகின்றார்:

"மான் நேர் நோக்கி உமையாள்பங்கா,
மறை ஈறு அறியா மறையோனே!"

(5-85)

"இறைவனே! உன்னைத் தவிர உண்மைப்பொருள் வேறு இல்லை. எனவே, மண்ணும் விண்ணும் உன்னை வணங்குகின்றன. நான்கு வேதங்களும் உன்னை எய்தும்பொருட்டு ஓலமிட்டு வருந்துகின்றன," என்று பாடுகின்றார்:

'வணங்கும் நின்னை மண்ணும் விண்ணும்,
வேதம் நான்கும் ஓலமிட்டு
உணங்கும் நின்னை எய்தல் உற்று,
மற்று ஓர் உண்மை இன்மையின்."

(5-75)

### வேதங்கள்பற்றி விவேகானந்தர்

வேதங்களைப்பற்றி சுவாமி விவேகானந்தர் கூறுவதை இங்குக் காணலாம்:

"The vedas are divided into two portions: one the Upanishads, the philosophical portion, the other the work portion.

We will try to give a little idea of the work portion. It consists of rituals and hymns, various hymns addressed to various gods. The ritual portion is composed of ceremonies, some of them very elaborate. A great many priests are required. The priestly function became a science by itself owing to the elaboration of the ceremonials. Gradually, the popular idea of veneration grew round these hymns and rituals. The gods disappeared and in their place were left the rituals. That was the curious development in India. If you ask the orthodox Hindu what the meaning is of these gods in the Vedes, he will not be able to give a satisfactory answer. The priests sing these hymns and pour libations and offerings into the fire. When you ask the orthodox Hindu the meaning of this, he says that words have the power to produce certain effects. That is all. The Vedas are simply words that have the mystical power to produce effects

if the sound intonation is right.........Thus, what in other religions is called prayer disappeared, and the Vedas became the gods.......

["Thoughts on the Gita"—Swami Vivekananda (Advaita Ashram, Calcutta]

"வேதங்களின் சேர்க்கையான உபநிடதங்களை "ஞான காண்டம்" என்றும், முற்பகுதியைக் "கர்மகாண்டம்" என்றும் பிரித்துள்ளனர்.

"கர்மகாண்டத்தைப்பற்றிச் சிறிது காணலாம். பல்வேறு தெய்வங்கள் மீதான துதிப்பாடல்களும் யாகக் கிரியைகளுமே கர்ம காண்டத்தில் உள்ளன. கிரியைகளைப் பற்றிய பகுதி யாகச் சடங்குகளை விரிவாகக் கூறுகின்றது. விரிவான சடங்குகளைச் செய்வதற்குப் பல வேதியர்கள் வேண்டும். சடங்கு முறைகளே நாளடைவில் சாத்திரங்கள் ஆகிவிட்டன. காலப் போக்கிலே, துதிப் பாடல்களும் யாகச்சடங்குகளும் தொழுவதற்குரிய புனிதம் பெற்று விட்டன! தெய்வங்கள் மறைந்து போயின, சடங்குகளே தெய்வங்க ளாகிவிட்டன! இந்தியாவில் இப்படி ஒரு விசித்திரமான நிலை வளர்ந்தது! வேதங்கள் கூறும் தெய்வங்களைப்பற்றிக் கேட்டால் வேதியர்களுக்கு எதுவும் தெரியாது. அவர்கள் சுலோகங்களைச் சொல்லிக்கொண்டே ஆகுதியை அக்கினியில் இடுவார்கள். துதிப்பதற்கான சுலோகங்களின் பொருள் என்ன என்று கேட்டால் அதுவும் அவர்களுக்குத் தெரியாது. வேதச் சொற்களுக்கு ஒரு சக்தி உண்டென்றும், அதனால் பலன்கள் உண்டென்றும் அவர்கள் கூறுவார்கள். இவ்வாறாக, வேதங்கள் என்பவை, தெய்வீக சக்தி வாய்ந்த சொற்களைக் கொண்டவை என்ற நிலை ஏற்பட்டது. சரியான முறையில் உச்சரிக்கும் பொழுது, ஓசையிலே சக்தி பிறக்கிறது என்றார்கள். முடிவில், வேதங்களால் துதிக்கப்பட்ட தெய்வங்கள் மறைந்து போயின, வேதங்களே தெய்வங் களாக ஆகிவிட்டன."

இவ்வாறு, வேதங்களைப்பற்றித் தெளிவாகக் கூறியுள்ளார் சுவாமி விவேகானந்தர். ["கீதை பற்றிய சிந்தனைகள்" என்ற நூலில் இருந்து.]

### ஓசையால் உணர்வு அரியவன்

வேதங்கள்பற்றிய நிலை இன்றும் இவ்வாறே உள்ளது. வேதச் சொற்களின் ஓசைக்கு தெய்வீக ஆற்றல் உண்டு என்றுதான் இன்றும் வேதத்தைத் தொழுபவர்கள் சொல்லி வருகின்றனர், பல நூறு ஆண்டுகளுக்கு முன்பும் இதுவேதான் கூறப்பட்டது.

வேதங்களின் ஓசையின் பயனாகவே ஒண்பொருளான இறைவனை எய்திவிடலாம் என்று வேதியர்கள் அன்றும் கூறி வந்தனர்.

இந்தக் கூற்றை மெய்யடியார்கள் ஏற்கவில்லை. "உருகும் உள்ளத்தில்தான் ஒண்பொருளின் ஒளி தோன்றும்," என்ற உண்மையினைக் கண்டோர்கள். ஓசையின் சக்தியால் ஒண்பொருளை எய்தலாம் என்ற கொள்கையினை எப்படி ஏற்பார்கள்? எனவே,

"ஓசையால் உணர்வார்க்கு உணர்வு அரியவன்"

(41-8)

என்று தெளிவாகப் பாடுகின்றார் மாணிக்கவாசகர்.

வேதச் சொற்களின் ஓசைநயத்தால் விமலனை எய்துதல் இயலாது என்பதே அன்புநெறி பரப்பிய அடியார்களின் அறுதியான முடிவாகும்,

இவ்வாறு இறைவன் வேதங்களுக்கு அப்பாற்பட்டவன், மறைகளாலும் அணுக முடியாதவன், ஓசை நயத்தால் மட்டுமே உணர முடியாதவன் என்ற உண்மை திருமுறைகளில் ஒலிக்கக் கேட்கிறோம்.

ஆழ்வார்களும் இந்த உண்மையினை உரைக்கத் தவறவில்லை.

"நாடிவந்து என் உள்ளத்தில் உறையும் நாதன், நான்மறைகள் தேடியும் காணமாட்டாதவன்," என்று பாடுகின்றார் தொண்டரடிப் பொடியாழ்வார்:

"நாடி என்றன் உள்ளங் கொண்ட
நாதனென்றும் நான் மறைகள்
தேடி யென்றும் காணமாட்டாச்
செல்வனென்றும்......"

(பெரிய திருமொழி—4-8-7)

"ஞாலமெல்லாம் உண்டு, ஆல் இலையில் பாலகனாய்ப் பள்ளி கொள்ளும் பரமன் நான்மறைகளால் தொடரப்படாதவன்," என்று பாடியருளுகின்றார்:

"ஞாலமெல்லாம் அமுது செய்து
நான்மறையும் தொடராத
பாலகனாய் ஆலிலையில்
பள்ளி கொள்ளும் பரமனிடம்"

(பெரிய திரு மொழி—4-1-6)

**வேள்விச் சடங்குகள்:**

எரி (அக்கினி) வளர்த்து வேள்வி செய்பவர்களைக் கண்டு இரக்கப்படுகின்றார் நாவுக்கரசர்.

எரியினை வளர்த்து யாகங்கள் செய்து அதன் மூலம் இறைவனை எய்தும் முயற்சியில் இறங்குகின்றார்களே! அந்த நெருப்பே இறைவனது உருவம் தானே? சோதியான இறைவனை அச் சுடரிலே காணாமல், சுருதிகளைச் சொல்லி வேறெங்கோ இருக்கும் இறைவனை வேள்விகள் மூலம் எய்தலாமென எண்ணுகின்றார்களே! இஃது ஏதோ நரித் தந்திரமாக வன்றோ உள்ளது!—இவ்வாறு, எரிவளர்ப் போரைக் கண்டு எள்ளி இரங்குகின்றார் நாவுக்கரசர்:

"எரிபெ ருக்குவர், அவ்வெரி ஈசன(து)
உருவ ருக்கம தாவது உணர்கிலார்,
அரி அயற்கரி யானை, அயர்த்துப்போய்
நரி விருத்தம தாகுவர் நாடரே!"

(பொது)

வேள்விகளெல்லாம் வெற்றுச் சடங்குகள் என்றும், இறைவனை உணராதோர் ஈடுபடும் செயல்கள் அவை என்றும், கூறுகின்றார். இதைவிடக் கடிந்து எவ்வாறு கூற முடியும்?

**வேத நெறியும் பக்திநெறியும்**

இதில் இருந்து தெரிவது என்ன?

பண்டைய நால்வேதங்களில் பற்பல தெய்வங்களை வழிபடும் சுலோகங்களும், இவ்வுலக இன்பவாழ்விற்குத் தேவையானவை பற்றிய வேண்டுதல்களும், இவற்றை அளிக்கும் தெய்வங்களைத் திருப்தி செய்வதற்கான வேள்விச் சடங்குகளும் விரிவாகக் கூறப் பட்டுள்ளன.

தெய்வங்களைத் திருப்தி செய்யும் வகையில் உயிர்ப்பலி கொடுத்து, வேள்விகள் செய்து, உலக வாழ்விற்கு உற்றனவற்றைப் பெற்று மகிழ்தல் என்ற அடிப்படையில் வேதநெறிகள் விரிந் துள்ளன.

பக்தி நெறியோ இதற்கு நேர்மாறானது. அன்பு நெறியில் இறைவனிடம் நாம் வேண்டுவது, இறைவன்மீது இடையறாத அன்பு ஒன்றுதான்,

"போகம் வேண்டி, வேண்டிலேன் புரந்தராதி இன்பமும்"

(திருவாசகம்-5-72)

என்கிறார் மணிவாசகர்.

இந்திர போகமும் வேண்டாம், எவ்வகை இன்பமும் வேண்டாம், என்கின்றனர் அடியார்கள்.

"......இடையரு அன்பு உனக்கு என்
ஊடகத்தே நின்றுருகத் தந்தருள் எம்உடையானே"
(திருவாசகம். 5-11)

இடையறுத இறைமை அன்பு மட்டுமே வேண்டும் என்கின்றனர் மெய்யடியார்கள்.

பண்டைய வேதங்களின் வேண்டுதல்களுக்கும் பக்திநெறிக்கும் எத்தகைய வேறுபாடு!

உலக இன்பங்களை நாடுவது வேதநெறி; உண்மை அன்பை நாடுவது பக்தி நெறி.

பலதெய்வங்களை வழிபடுவது பண்டைய வேதம், பரம்பொருள் ஒன்றே என்பது பக்தியின் சாரம்.

உயிர்ப்பலி கொடுப்பது வேதநெறி, உயிர்களனைத்திலும் உத்தமனைக் காண்பது பக்திநெறி.

எனவேதான் வேதங்களுக்கு அப்பாற்பட்டவன் இறைவன் என்பதைத் தெளிவாக எடுத்தோதுகின்றனர் அடியார்கள்.

பக்தி நெறி என்பது எவ்வாறு வேதநெறியினின்றும் வேறுபட்டது என்பதனை நாம் தெளிவாகத் தெரிந்துகொண்டால்தான், பக்தி நெறியின் பாங்கினை நாம் உள்ளவாறு உணர முடியும்.

இனி, செந்தமிழ்ச் செந்நெறியின் சீர்மையினைக் காண்போம்.

(தொடரும்)

## தமிழீழம் மலரட்டும்!

[கடலூர் மணிமாறன், க.மு.]

தமிழீழம் தோன்றுவதை யாவ ராலும்
தடுப்பதற்கு வியலாது ! தருக்கு வோரின்
திமிரொடுங்கும் காலமது தொலைவில் இல்லை !
தெரிந்தும்சில வல்லரசு துணைசெய் தாலும்
தமிழினத்தைக் கருவறுக்கும் செயலில் தோற்றுத்
தலைகுனிந்து பேரிழிவைப் பரிசாய் எய்தும்
இமிழ்கடல்சூழ் பன்னாடும் தமிழீ ழத்தை
இலங்குபுகழ்த் தனிநாடாய் இனிதே ஏற்கும் !

## உள்நோக்கம் என்னே !

[கவிஞர், சி. து. கன்னிசாமி "இளம்பூரணன்"]

1. குரோதன பிறந்த திந்தக் குவலயம் குணத்தால் ஒன்றி
விரோதமும் குழப்பம் யாவும் வீழ்ந்திடும் விளைவும் ஓங்கும்
அராசகம் அழியும் அன்பின் ஆட்சியாம் என்ற தெல்லாம்
இரா வரும் கனவாய்த் தேய இன்னல்கள் எழுந்த அந்தோ !

2. கெட்டது கிழக்கு வங்கம் ! கிடுகிடுத் துலக மெல்லாம்
பட்டது பயத்தில் வெள்ளம் பாழ்செய்யப் புயலின் வேகம்
வெட்டியோர் இலக்கம் பேரை விழுங்கிய திந்தக் கூத்து
விட்டதோ ! பின்னும் சேதம் ! விரைகின்ற தெங்கும் ஓலம்.

3. ஆலையில் நச்சுக் காற்றால் ஆவியை இழந்தார் கோடி
சாலையின் விபத்தில் ஆவி சரிந்தவர் பல்லோர் தீயின்
மேலுறும் புழுக்கள் என்ன வெந்தவர் பலபேர் சீற்றக்
காலுறு புயல்வெள் ளத்திற் கணக்கிலார் அழிந்தார் அந்தோ !

4. பசியினால் வாடும் சேய்க்குப் பயம் ஒன்றே காட்டும் தாய்போல்
நசையினால் மழைவி ரும்பும் நானிலம் பாழ்பா ழாகக்
கசிவிலாக் கடும்பேய் வெள்ளம் கலக்கியா ருயிர்வி ழுங்கும்
பசையிலாக் கூத்தைக் கண்டு பதைக்கின்றோம் ஏழை யோமே.

5. எங்கும்துப் பாக்கிச் சூடு பகற்கொள்ளை ஈழ நாட்டில்
சிங்களம் தமிழர் தம்மைச் செகுத்திடும் கொடுமை பாரில்
எங்கணும் கற்ப ழிப்பும் இரக்கமில் கொலையும் சூதும்
இங்கிவை ஒழிந்தா லன்றோ எடுபடும் திட்ட மெல்லாம் !

6. எரிந்தன சைதைப் பக்கம் எண்ணிலாக் குடிசை சென்னைப்
பெருந்தன மூரங் காடிப் பீடழிந் தொழியச் செந்திக்
கரிந்தநா வனைத்த தெங்கும் கலங்கின நெஞ்ச மெல்லாம்
தெரிந்திது போல முன்னாட் செய்தியொன் றறிகி லேமால் !

7. சென்னைக்கே அழகு கூட்டும் செல்வங்கள் கொழித்து மாந்தர்
பன்னூறு பேர்க்கு வாழ்வு பரிந்திட்ட மூரங் காடி
அன்னோவின் றெரிந்த சாம்பர் ஆயதே ! அலங்கு தீயின்
உள்நோக்க மென்னே ! இன்றே உலகினை அழிப்ப தேயோ !

---

# குடந்தைக் கீழ்க்கோட்டம் கல்வெட்டுகள்

[டாக்டர் இரா. கலைக்கோவன், எம்·பி., பி. எசு. டி. ஓ.]

(முன் இதழ் ௬௭௦ ஆம் பக்கத் தொடர்ச்சி)

இரண்டாம் ஆதித்தனுடைய இன்னொரு நான்காம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டு[23] முதற் பராந்தகனுடைய மகனும், தக்கோலப்போரில் இறந்தவருமான, 'ஆனைமேல் துஞ்சிய இராசாதித்த தேவரின்' தாயாரான உடைய பிராட்டியார் கோக்கிழான் அடிகளின் பணிப் பெண்ணான தஞ்சைக் கீழ வேளத்தைச் சேர்ந்த பெண்டாட்டி தேவயன் புலாலக்கன் என்னும் அவனி சிகாமணி, திருக்கீழ்க்கோட்டத்துப் பரமேசுவரர் கோயிலில விளக்கொன்று எரிக்கத் தொண்ணூறு ஆடுகளைக் கொடையாக வழங்கிய செய்தியைக் கூறுகிறது.

இம் மன்னனுடைய ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, வடகரை பாம்பூர் நாட்டைச் சேர்ந்த தேவதானமான திருக்குடமூக்கின் ஊரவையார், தஞ்சைப் பழைய வேளத்தைச் சேர்ந்த பெரியன் திரிபுவன சுந்தரி என்ற பணிமகளிடம் பெற்றுக்கொண்ட எண்பத்தைந்து கழஞ்சு பொன்னுக்கு நிலமொன்றை விற்றுத் தந்தனர் என்றும், அப்பெண் தான் வாங்கிய நிலத்தைக் கோயிலாரிடம் ஒப்புவித்து அதன் வருவாயில், திருக்கீழ்க்கோட்டத்துப் பரமசாமி கோயிலில் ஒரு சிவயோகியை உண்பிக்கச் செய்தாள் என்றும் கூறுகிறது[24].

## மன்னன் பெயரற்ற பரகேசரிவர்மனின் கல்வெட்டுகள்

இனி இக் கோயிலில் இருக்கும் மன்னன் பெயரற்ற எட்டு பரகேசரிக் கல்வெட்டுகளைப் பார்ப்போம். இவற்றுள் ஒன்று பரகேசரியின் இருபத்தெட்டாம் ஆட்சியாண்டில் வெட்டப் பட்டுள்ளது. மிழலைக்கூற்றத்துக் கருவூரைச் சேர்ந்த தனவடி அரங்கன் என்னும் பஞ்சவன், திருக்கீழ்க்கோட்டத்துப் பட்டாரகர் கோயிலில் விளக்கொன்று எரிக்கப் பொருட் கொடையளித்த செய்தியை இக் கல்வெட்டு உணர்த்துகிறது[25]. இறைவனை 'பட்டாரகர்' என்றும் இறைவியை 'பட்டராகி' என்றும் அழைக்கும்

23. ARE 226 Of 1911.
24. ARE 225 Of 1911
25. ARE 246 Of 1911

பழக்கம் முதற் பராந்தகன் காலத்தில் இருந்தமைக்குக் கல்வெட்டுச் சான்றுகள் நிறையவே உள்ளன. கல்வெட்டின் உயரிய ஆட்சி யாண்டு செய்தியின் தன்மை இவற்றைக் கொண்டு நோக்கும் போது இதை முதற் பராந்தகனுடையதாகக் கொள்வதில் தவறேதும் இருக்க முடியாது.

ஏனைய ஏழு கல்வெட்டுகளுள் ஒன்று ஆட்சியாண்டு தெரியாத பரகேசரியின் கல்வெட்டாகும்[26]. அந்தணர்களை உண்பிப்பதற்காக எண்பது கழஞ்சு பொன் கொடையாகத் தரப்பட்ட செய்தியை இக் கல்வெட்டு உணர்த்துகின்றது. மற்ற ஆறு கல்வெட்டுகளும் பரகேசரிவர்மனின் இரண்டாம், மூன்றும், நான்காம், ஐந்தாம் ஆட்சி யாண்டுகளில் வெட்டப்பட்டுள்ளன. இரண்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் இரண்டனுள் ஒன்று, உடையார் வீரசோழத் தெரிஞ்ச கைக்கோளர் பிரிவைச் சேர்ந்த கடிகாவன் கல்லான் என்பார் இக் கோயிலில் விளக்கொன்று எரிக்கத் தொண்ணூறு ஆடுகளைத் தந்த செய்தியையும்.[27] இன்னொன்று, தேவன் இராசா தித்தன் என்னும் கைக்கோளர் இக் கோயிலில் விளக்கெரிக்கத் தொண்ணூறு ஆடுகளைத் தந்ததையும்[28] கூறுகின்றன. மூன்றும் ஆட்சியாண்டுக் கல்வெட்டு மலைநாட்டிலுள்ள, நெடும்புரையூரைச் சேர்ந்த பூவன் கண்ணன் என்பார், இக்கோயிலில் விளக்கொன்று எரிக்க இருபத்தைந்து கழஞ்சு பொன்னைக் கொடையளித்ததைக் கூறுகிறது[29]. நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு நந்தி புரத்தைச் சேர்ந்த வணிகர் ஒருவர் இக் கோயிலில் அந்தணர் ஒருவரை உண்பிப்பதற்காக, நிலக்கொடை தந்த செய்தியைக் கூறுகிறது[30]. ஐந்தாம் ஆண்டுக் கல்வெட்டுகளுள் ஒன்று, விளக்கெரிக்க ஆடுகள் கொடையாகத் தரப்பட்டதையும்[31], மற்றொன்று தேவன் நக்கன் என்பார் தொண்ணூற்றேழு ஆடுகள் தந்து இக் கோயிலில் விளக்கெரிக்கச் செய்ததையும்[32] கூறுகின்றன.

இந்த ஏழனுள் சில இரண்டாம் ஆதித்தனுடையனவாகலாம், சில உத்தம சோழனுடையதாகலாம் என்று வரலாற்றறிஞர்களும் கல்வெட்டாய்வாளர்களும் கருதுகிறார்கள். என்னைப் பொறுத்த மட்டில், இவையனைத்துமே உத்தம சோழனுடையவை எனக் கொள்

26. ARE 237 Of 1911
27. ARE 251 Of 1911
28. ARE 242 Of 1911
29. ARE 248 Of 1911
30. ARE 247 Of 1911
31. ARE 243 Of 1911
32. ARE 244 Of 1911

வதுதான் பொருத்தமாகத் தோன்றுகிறது. இதற்கான காரணங்களை வரிசையாகக் காண்போம்.

1. இரண்டாம் ஆதித்தன் இக் கோயிலில் காணப்படும் தன்னுடைய அனைத்துக் கல்வெட்டுகளிலும் 'வீரபாண்டிய முடித்தலை கொண்ட கோப்பரகேசரி' என்றே அழைக்கப்படுகிறான்.

2. உத்தம சோழனுடையதாக உறுதிப்படுத்தப்பட்ட நான்கு கல்வெட்டுகள் இக் கோயிலில் உள்ளன. அவற்றுள் ஒன்றில் 'உத்தம சோழ நம்பிராட்டியார்' என்ற பெயர் காணப்படுகிறது. இன்னொன்றிலும் உத்தம சோழனின் நம்பிராட்டியார் குறிக்கப் படுகிறார், மற்ற இரண்டு கல்வெட்டுகளிலும் உத்தம சோழனைக் குறிக்கும் எந்தத் தொடரும் பெயரும் இல்லாத போதும், அக் கல்வெட்டுகளில் காணப்படும் காலக் குறிப்பு கொண்டு திரு. எல். டி. சாமிக்கண்ணுபிள்ளை போன்ற பேரறிஞர்கள், அவற்றை உத்தம சோழனுடையனவாக வரையறுக்கிறார்கள். இந்நான்கு கல்வெட்டுகளிலுமே மன்னன் பெயர் பரகேசரிவர்மன் என்றே குறிக்கப்பட்டுள்ளது. இவை உத்தம சோழனுடைய நான்காம் ஆட்சியாண்டிலும், எட்டாம் ஆட்சியாண்டிலும், பதின்மூன்றும் ஆட்சியாண்டிலும் வெட்டப்பட்டுள்ளன.

3. அடைமொழிகளற்ற பரகேசரிவர்மன் உத்தமசோழன் ஒருவன்தான். அவனுக்குப் பின்வந்த அத்தனைப் பரகேசரிகளும் மெய்க்கீர்த்திகளை உடையவர்கள். அவர்களின் கல்வெட்டுகள் அனைத்துமே மெய்க்கீர்த்திகளுடன்தான் துவங்குகின்றன. ஒன்றிரண்டு விதிவிலக்காய் இருக்கலாம். அதைக் கருத்தில் கொள்ளல் கூடாது. ஏனென்றால் இங்கு பரகேசரிவர்மனின் கல்வெட்டுகள் ஏழு உள்ளன. இவை உத்தம சோழனுக்குப் பின் வந்த பரகேசரிவர்மனுடையவை என்றால், ஒன்றில் கூடவா மெய்க் கீர்த்தி இல்லாமல் போகும் ?

4. முதற் பராந்தகனுக்குப் பின்னும் உத்தம சோழனுக்கு முன்னும் இருந்த பரகேசரிகள் இருவர்தாம். ஒருவன் 'வீர பாண்டியன் முடித்தலை கொண்ட கோப்பரகேசரியான, ஆதித்தன். இன்னொருவன் அரிஞ்சயன். அரிஞ்சயன். மிகக் குறைந்த காலமே ஆண்டதால் இவை அவன் கல்வெட்டுகளாய் இருக்க வழியில்லை.

5. அடைமொழியில்லாமல் இருப்பதால் இவை இரண்டாம் ஆதித்தனுடையனவாகவும் வழியில்லை.

6. இக் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ள 'நந்திபுரம்', 'மலைநாடு' 'வீரசோழத் தெரிஞ்சகைக்கோளப் பிரிவு' இவற்றைப் பார்ப்போம். பழையாறை கி, பி. ஒன்பது, பத்தாம் நூற்

ருண்டுகளில் பழையாறை நந்திபுரம் பல கல்வெட்டுகள் உறுதி செய்கின்றன[33]. மலைநாடு ஈழத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்ட சொல்லாகும். இரண்டாம் பராந்தகன் காலத்து ஈழப்போரின் விளைவாக ஏற்பட்ட சோழ ஈழத் தொடர்புகள் நெடும்புரையூர் பூவன் கண்ணனின் கொடைக்குக் காரணமாக இருக்கலாம். 'வீரசோழன்' என்பது முதலாம் பராந்தகனின் சிறப்புப் பெயர். இப் பெயருடன் கூடிய தெரிஞ்ச கைக்கோளப் பிரிவைச் சார்ந்த இருவர் இக் கோயிலுக்கு கண்டராதித்தன் காலத்தில் கொடையளித்தமைக்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. இவ் வீரசோழத் தெரிஞ்ச கைக்கோளப் பிரிவு முதற் பராந்தகன் காலம் தொட்டு உத்தமசோழன் காலம் வரை இருந்ததில் வியப்பொன்றுமில்லை. முதற் பராந்தகனின் ஆட்சி முடிவுக்கும் உத்தம சோழனின் ஆட்சித் துவக்கத்திற்கும் இடையிலுள்ள காலம் பதினேழு ஆண்டுகள்தாம். இந்த இடைப்பட்ட காலத்தில் குறிப்பிடத்தக்க மன்னனாய் விளங்கியவன் சுந்தர சோழன் ஒருவன்தான். இராசகேசரியான அம் மன்னனுக்குப் பிறகு பட்டத்துக்கு வந்தவனே உத்தமசோழன்.

முதலாம் இராசராசன் காலத்தில் இத் தெரிஞ்ச கைக்கோளப் படையின் பெயர், மாற்றம் பெறுவது உணரத்தக்கது.

இவையனைத்தையும் கொண்டு நோக்க இக் கோயிலில் உள்ள மன்னன் பெயரற்ற பரகேசரியின் கல்வெட்டுகள் அனைத்தும் (இருபத்தெட்டாம் ஆட்சியாண்டு கல்வெட்டு தவிர) உத்தம சோழனுடையவை என்று துணிந்து கூறலாம்.

**உத்தம சோழன் கல்வெட்டுகள்**

இரண்டாம் பராந்தகனை அடுத்து ஏறத்தாழப் பதினைந்து ஆண்டுகள் சோழ மண்டலத்தை ஆண்டவன் உத்தமசோழன். கற்றளிக் கலைக்குப் பெருந் தொண்டாற்றிய பெருமாட்டி செம்பியன் மாதேவியின் அருமைப் புதல்வன் இவன். இவனுடையதாகக் கல்வெட்டறிஞர்களால் உறுதிப்படுத்தப்பட்ட கல்வெட்டுகள் நான்கும், பரகேசரிவர்மன் என்ற பெயரில் அமைந்து இவனுடையதாக முடிவு செய்யப்பட்டிருக்கும் கல்வெட்டுகள் ஏழுமாக மொத்தம் பதினொரு கல்வெட்டுகள் இக் கோயிலில் உள்ளன. பரகேசரிவர்மன் என்ற பெயரில் அமைந்து உத்தமசோழனுடையவையென்று முடிவு செய்யப்பட்டிருக்கும் ஏழு கல்வெட்டுகள் கூறும் செய்திகளை மன்னன் பெயர் தெரியாத பரகேசரிவர்மனின் கல்வெட்டுகள் என்ற தலைப்பின் கீழ்ப் பார்த்தோம். இம மன்னனை நேரடியாகக் குறிக்கும் நான்கு கல்வெட்டுகளை இங்குக் காண்போம்.

(தொடரும்)

---

33. பிற்காலச் சோழர் வரலாறு, தி. வை. சதாசிவப் பண்டாரத்தார், பக்கம். 82.

# எகர ஒகரம் புள்ளியெய்தல்

## (பேராசிரியர் இரா. மதிவாணன்)

மெய்யெழுத்துகள் அனைத்தும் புள்ளி பெறும் என்று கூறவந்த தொல்காப்பியர் உயிர்க்குறில் ஐந்தில் எகர ஒகரமாகிய இரண்டு மட்டும் மெய்யெழுத்துகளைப்போல் புள்ளி பெறும் என்று குறிப்பிடுகிறார்.

''மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்''

—(தொல். எழுத். 15)

''எகர ஒகரத் தியற்கையும் அற்றே''

—(தொல். எழுத். 16)

எபிரேய மொழியில் ஒரு காலத்தில் உயிரெழுத்துகளும் புள்ளி பெற்றன என்று கூறுவர், அதனைத் தமிழொடு தொடர்புபடுத்தப் போதிய சான்றுகள் கிடைத்தில. நெடிலோசையினின்றும் குறிலைக் குறைத்துக் காட்ட, புள்ளியிடப்பெற்றதெனின் ஐங்குறிலும் நிரலே புள்ளி பெற்றிருத்தல் வேண்டும்.

அறிஞர்களிடை இஃது நெடிய வினாக்குறி யெழுப்பி விடை காணவியலாத சூழலில் எல்லாம் வடமொழியிலிருந்து வந்தது என்று கூறும் ஐந்தாம்படை ஆராய்ச்சியாளர்கள் வடமொழியில் எழுத்துத் தோன்றிய பிறகே தமிழ் எழுத்துத் தோன்றியதால் வடமொழியிலில்லாத எகர ஒகரக் குறிலைக் குறிக்கப் புள்ளியிட்டனர் என்று நா கூசாமல் கூறிவிட்டனர்.

சிந்துவெளி முத்திரையை நான் தொடர்ந்து ஆய்ந்து வந்ததன் விளைவாகப் பல உண்மைகள் புலப்பட்டு வருகின்றன. சிந்துவெளித் தமிழர்கள் படவெழுத்துக் காலத்திலிருந்து மொழி வளர்த்தவர்கள். அது கருத்தெழுத்தாகிப் பின்னர் அசையெழுத்து ஒலியெழுத்து வடிவம் பெற்ற காலத்திலும் வரிவடிவில் பெற்ற மாற்றங்கள் தொன்மை நிலையைத் தாங்கி நிற்கின்றன.

சிந்துவெளி மொழியில் பன்னிரு உயிரெழுத்துகளிருப்பினும் அவை முச்சுட்டுகளுக்குரிய மூன்றே குறில் வரி வடிவங்களால் எழுதப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு நெடிலும் இரு குறிலிணையாக எழுதப்பட்டிருக்கின்றன. இதிலிருந்து பின்வருமாறு உயிரெழுத்துகளை மீட்டமைக்க வியலுகிறது.

## சிந்துவெளி எழுத்தில்

| உயிர்க்குறில் | உயிர்நெடில் |
|---|---|
| அ | அஅ (ஆ) |
| இ | இஇ (ஈ) |
| உ | உஉ (ஊ) |
| எ (இஅ) | இஅ (ஏ) |
| — | அஇ (ஐ) |
| ஒ (உஅ) | உஅ (ஓ) |
| — | அஉ (ஔ) |

இதன்படி இன்றைய எகர ஒகரக் குறில்கள் நெடிலைக் குறிக்கும் குறிலிணை வரிவடிவங்களின்மேற் புள்ளியிட்டு எ(இ·அ), ஒ(உ·அ) எழுதப்பட்டிருக்க வேண்டும். தொடக்க காலத்தில் முச்சுட்டுகளே வரிவடிவம் பெற்றிருத்தல் வேண்டும் என்றும் அவற்றிலிருந்தே ஏனை ஏழு நெடில்களும் குறில்களும் வடிவம் பெற்றமையின் எகர ஒகரக் குறில்கள் புள்ளிபெற நேர்ந்தன என்றும் அறியலாம்.

ஐகார ஔகாரத்திற்குக் குறில்கள் இன்மையின் அவற்றின் மேற் புள்ளியிடும் கருத்தெழவில்லை. அவை குறுக்கமாகுங்கால் ஒன்றரை மாத்திரை பெற்றமையின் அய், அவ் எனப் பேச்சு வழக்குத் திரிபுற்றன. அவை செவ்விய வழக்கெனக் கொள் ளப்படா. ஐகார ஔகாரக் குறுக்கம் போலன்றி ஏகார ஓகாரக் குறுக்கம் உயிர்க்குறிலாகவே வழங்கும் பெற்றிநோக்கிப் புள்ளி பெற்றன. கூட்டெழுத்தாகிய அசையெழுத்து நிலையினின்றே ஒலி யெழுத்துத்தோன்றியிருத்தலின்பண்டையோர் உயிர்மெய்க்கு வரிவடி வமைத்தபின் மெய்யெழுத்துக்கு வரிவடிவு தர உயிர்மெய்யின்மேற் புள்ளியிட்டு மெய்யெழுத்தை ஆக்கினர். அவ்வாறே இரு குறிலிணையாகிய உயிர்நெடிலினின்றே உயிர்க்குறிலுக்கு வரிவடி வமைத்துள்ளனர். மெய்யும் உயிருமாகிய குற்றியலுகரம் புள்ளி பெறுதலின், உயிரும் உயிருமாகிய எகர ஒகரக்குறில் புள்ளி பெறுதல் வியப்புக்குரியதுமன்று; வினாவெழுப்பக் கூடியதுமன்று.

---

## துன்பத்தின் பயன்

*அரைக்கீரை கிள்ளக்கிள்ளத் துளிர்த்து வளர்வது போல ஆற்றல் நிறைந்த மனிதன் துன்பத்தால் தாக்கப்பெற - தாக்கப் பெற அவன் ஊக்கமும் உற்சாகமும் பெறுகிறான். கோழைகள் பகைவரால் அழிக்கப்படுகிறார்கள்.*

குன்றக்குடி அடிகளார்.

# குறிஞ்சிப்பாட்டில் வரும் செடிகொடி மரப்பெயர்கள்

[பி. எல். சாமி, இ. ஆ. ப. (ஓய்வு)]

[முன் இதழ் ௩௬௫ஆம் பக்கத் தொடர்ச்சி]

தணக்கு மரம் அதே பெயரில் தமிழிலும், கன்னடத்திலும், தெலுங்கிலும் வழங்குகின்றது. தணக்கம் என்பது வால்போன்ற ஓர் அமைப்பு என்று சிந்தாமணி (2887) கூறுகின்றது. தணக்க மரத்தின் உலர்கனி வால்போன்ற அடிப்பாகத்தை உடையது. (Tail like persistant perianth lobes) இதன் காரணமாகவே இம் மரம் தணக்கு என்றழைக்கப்பட்டது. தணக்கை அறிவியலில் Gynocarpus communis என்றழைப்பர்.

ஈங்கை என்ற செடிக்கு இண்டு என்று பொருள் கூறியுள்ளனர். ஈங்கையும் இண்டும் பார்வைக்கு ஒன்று போல கொடிய வளைந்த முட்களை உடையனவாகத் தோன்றினும் இரண்டும் வெவ்வேறானவை. சங்கநூல்களில் வெவ்வேறாகவே விளக்கப்பட்டுள்ளன. அறிவியற் படி ஈங்கை Acacia caesia என்றழைக்கப்படும். இண்டு Pterolobium Indicum என்று அழைக்கப்படும். இளந்தளிர் விளக்கத்திலிருந்தும் சிவப்பு நிறப்பூவிலிருந்தும் ஈங்கை Acacia caesia என்று கண்டுகொள்ளலாம்.

இலவம் இப்போது முள்ளிலவு என்று அழைக்கப்படுகின்றது. இப்பொழுது பஞ்சுக்காக வளர்க்கப்படும் இலவ மரம் வெளிநாட்டிலிருந்து அண்மையில் வந்ததாகும். இதற்குச் சிவந்த பூ கிடையாது. முள்ளிலவத்திற்குத் தடித்த சிவந்த பூவிதழ்கள் உண்டு. இந்த இதழ்களை மனிதரின் நாக்கிற்கு ஒப்பிட்டுச் சங்கநூல்கள் (அகம் 142) கூறும். இதை அறிவியலில் Bombax malabarica என்றழைப்பர்.

கொன்றை யாவருக்கும் தெரிந்த மரமாகும். வேனிற்காலத்தில் இலைகளை உதிர்த்துப் பூக்கும் கொன்றை மரம் மிக அழகாக இருக்கும். மாலை போல் இதன் பூங்கொத்து தொங்கும். அறிவியலில் இதை Cassia fistula என்றும் ஆங்கிலத்தில் Indian laburnam என்றுமழைப்பர்.

அடும்பு என்ற செடி அதே பெயரால் இன்றும் வழங்குகின்றது. இதனுடைய கவைத்த இலைகளையும் மணி போன்ற பூக்களையும் அக

நானூறும் (80) குறுந்தொகையும் (243) குறிப்பிட்டுக் கூறியுள்ளன. இதை Ipomea pescapra என்று அறிவியலில் கூறுவர்.

ஆத்தி சோழர் குலத்தின் அடையாளப் பூவாகும். இம் மரத்தின் நாரிலிருந்து மாலைகள் தொடுப்பதும் கூறப்பட்டுள்ளது. இது கோயில்களில் வளர்க்கப்படுகின்றது. இதை அறிவியலில் Bauhinia racemosa என்றழைப்பர்.

அவரை ஒரு கொடியென்று கூறியுள்ளனர். குறிஞ்சிப் பாட்டிலும் சங்கநூல்களிலும் கூறியுள்ள அவரை தற்காலத்தில் அழைக்கப்படும் அவரை அன்று. இது மொச்சையாகும். வெண்மையான பூக்கள் என்று சொல்லப்படுவதிலிருந்தும், இது பூக்கும் காலத்திலிருந்தும் சங்கஇலக்கியத்திலும் கூறப்பட்ட செடி அறிவியற்படி Dolichos lab-lab என்பதேயாகும். இது பழங் காலத்தில் பயிராக்கப்பட்டதாகவும் இந்தியாவில் தோன்றியதாகவும் கூறுவர்.

பகன்றை என்ற கொடி கூறப்பட்டுள்ளது. இதற்குப் பொருள் சிவதை என்று கூறப்பட்டுள்ளது. இதனுடைய பூக்கள் வெள்ளித் தகடுகள் போல பூப்பதாகச் சங்கநூல்கள் (அகம் 219, கலி 73) கூறும். இஃது ஒரு கொடியென்றும், குளத்தினருகிலும் சதுப்பு நிலத்திலும் வளர்வதாகவும் கூறப்பட்டுள்ளது. இதை அறிவியலில் Operclunia turpethum என்றழைப்பர்.

பலாசம் என்ற செடி கூறப்பட்டுள்ளது. இப்பெயர் சங்கநூல் களில் கூறப்படவில்லை. இது முருக்கு என்ற தமிழ்ப்பெயருக்கு வழங்கிய வடமொழிப் பெயராகும். முருக்கின் பூவின் அழகு பல சங்கப் பாடல்களில் (அகம் 42, 223, 229, 277, குறுந்தொகை 156, நற்றிணை 73) கூறப்பட்டுள்ளது. பலாசம் என்ற சொல் பிற்காலத் தமிழ் இலக்கியங்களில் வழங்குகின்றது. முன்னரே முருகிலை என்பதற்கு முருக்கிலை என்று பொருள் கொண்டதால் பலாசம் என்ற முருக்கு முன்னரே கூறப்பட்டதாகக் கொள்ள வேண்டும். ஆனால் முருக்கிலை அழகியதன்று. இதை அறிவியலில் Butea frondosa என்றழைப்பர்.

பிண்டி என்ற மரம் கூறப்பட்டுள்ளது. இப்பெயரை பௌத்தர்கள் அசோக மரத்தைக் குறிக்கப் பயன்படுத்தினர். சங்கநூல் களில் பிண்டி என்ற பெயர் (மதுரைக் காஞ்சி வரி 700) அரிதாக வருகின்றது. ஆனால் செயலை என்ற அசோக மரம் சங்கநூல் களில் (குறுந்தொகை 233. ஐங்குறுநூறு 293.) முதலிய பல பாடல்களில் விளக்கப்பட்டுள்ளது. இப்பொழுது அசோகு என்று கூறப்படும் மரம் வேறொன்றாக இருக்கக் காண்கிறோம். இஃது

அழகிய நெடிய கிளைகளையும் அழகிய இலைகளையும் உடையதனால் வீட்டில் வளர்க்கப்படுகின்றது. இதை Polyalthia longifolia என்றழைப்பர். இது சங்கநூல்களில் கூறப்பட்ட செயலையுமில்லை; குறிஞ்சிப்பாட்டில் கூறப்பட்ட பிண்டியுமில்லை.

வஞ்சி என்ற மரம் கூறப்பட்டுள்ளது. இதை இப்பொழுதும் நீர்வஞ்சி என்றழைக்கின்றனர். ஆறுகளின் ஓரத்தில் சூழலாக வளரும், சங்கநூல்களில் (புறம் 387) (ஐந்திணை எழுபது 43) ஆற்றோரங்களில் வளர்வதாகக் கூறப்பட்டுள்ளது. இதை அறிவியலில் Salix tetrasperma என்று வழங்குவர். பித்திகம் என்பது ஒருவகை முல்லை. மலையாளத்தில் பிச்சகம் என்றழைப்பர். இதைக் கேரளத்தில் மிகுதியாகக் காணலாம். இதன் பூ செவ்வரி கொண்டிருப்பதாகச் சங்கநூல்கள் (அகம் 42, 295, குறுந்தொகை 222) கூறும். கார்காலத்தில் பூப்பதாகக் கூறுவர். இஃது அறிவியலில் Jasminum Angustifolium ஆக இருக்கலாம்.

சிந்துவாரம் என்ற வடமொழிச் சொல்லில் கூறப்பட்ட செடி குறிஞ்சிப்பாட்டில் வருகின்றது, இதைக் கருநொச்சி என்று உரையாசிரியர் உரைகளும் நிகண்டுகளும் கூறும். காளிதாசர் சிந்துவாரம் என்றழைத்திருக்கின்றார். இதை அறிவியலில் Vitex Negunda என்றழைப்பர்.

தும்பை யாவருக்கும் தெரிந்த செடியேயாகும், வெள்ளைப் பூக்களை உடையது. அறிவியலில் Leucus aspera என்றழைப்பர்.

துழாய் என்பது துளசியாகும். துளசி என்ற வடசொல்லே துழாய் என்ற தமிழ்ச் சொல்லிலிருந்து வந்தது என்று கருதுகின்றனர். இந்தத் துழாய் வீடுகளில் வளர்க்கப்படும் துளசியாகும். இது அறிவியலில் Ocimum sanctum என்றழைக்கப்படும்.

தோன்றி என்பது காந்தளாகும். மலையாளத்தில் இப்பெயர் வழங்குகின்றது. காந்தளில் ஒருவகைக்குத் தோன்றி என்ற பெயர் கூறப்பட்டிருக்கலாம்.

நந்தி என்பது நந்தியாவட்டம் என்று உரையாசிரியர் கூறியுள்ளார். இது தோட்டங்களில் வளர்க்கப்படுவதாகும். வெண்மையான பூக்களை உடையது. இதை அறிவியலில் Tabernemontana Corcnaria என்றழைப்பர்.

நறவம் ஒரு கொடியாகும். இதை சித்த வைத்திய ஆராய்ச்சி அறிஞர் குமாரசாமி Lavunga Scandens என்று கண்டு பிடித்துள்ளார். இதன் காய்கள் நறுமணமுடையனவாகும். இதுவே ஏற்புடைத்தாகும்.

புன்னாகம் என்பது புன்னையில் ஒரு விசேடம் என்று உரையாசிரியர் கூறியுள்ளார். புன்னை மரத்தைப்பற்றிப் பின்னர் குறிஞ்சிப்பாட்டில் குறிப்பு உள்ளது. புன்னை போன்றும் நாகமரம் போன்றும் உள்ள ஒரு மரத்தையே புன்னாகம் என்று கூறினர். அத்தகைய புன்னாகம் அறிவியலில் Colophyllum elata என்று அழைக்கப்படும். இது மேற்குத் தொடர்ச்சி மலைகளில் வளர்வது. கடற்கரையோரத்தில் புன்னையைப் போன்று வளராது.

பாரம் பருத்திச் செடியாகும். இஃது இயற்கையாகச் சங்க காலத்தில் வறட்சியான இடங்களில் காணப்பட்டது. இதை Gossipium herbaceum என்றழைப்பர்,

பீரம் என்பது பீர்க்குச் செடியாகும். இதை Luffa actuangula என்றழைப்பர். பீரம் என்பது செடியாகும். மரமில்லை.

குருக்கத்தி வடமொழியில் மாதவி என்றழைக்கப்படும் கொடியாகும். இதற்கு மணமிக்க பூ உண்டு. இதைக் குருகிலை என்று சங்கநூல்கள் கூறும். இதை அறிவியலில் Hiptage Madablata என்றழைப்பர்.

ஆரம் சந்தன மரமாகும். இது யாவர்க்கும் தெரிந்த தொன்றாகும், அறிவியலில் Santalum Album என்று அழைக்கப்படும்.

காழ்வை அகில் என்றழைக்கப்படும், இஃது அறிவியற்படி Dysozylum malabaricum என்பதாகும்.

புன்னை யாவர்க்கும் தெரிந்ததே. கடற்கரையோரங்களில் மிகுதியாகக் காணப்படும். இதைச் சங்கநூல்களில் பல பாடல்களில் கூறியுள்ளனர். இதை Colophyllum inophyllum என்று அறிவியலில் அழைப்பர்.

நரந்தம் நாரத்தையின் பூவென்று நச்சினார்க்கினியர் கூறியது தவறு. நரந்தம் என்ற நறுமணமிக்க புல்லைப் பற்றி சங்கநூல்கள் (புறம் 132, பரிபாடல் 7 : 11) கூறியுள்ளன. நரந்தப் புல்லிலிருந்து நறுமணமிக்க எண்ணெய் எடுப்பதுபற்றிச் சங்கநூல்கள் (புறம் 235) கூறியுள்ளன. நாரத்தை ஒரு மரமாகும்.

பதிற்றுப்பத்தில் ஒரு பாடலில் (11 : 22) இமாலயத்தில் இந்தப் புல் விளைந்தது கூறப்பட்டுள்ளது. இதிலிருந்து எடுக்கப்படும் எண்ணெய் மேல்நாட்டுக்கு ஏற்றுமதியானதை Dioskoroides பெரிப்புளூஸ், பிளினியின் நூல்களில் கூறப்பட்டுள்ளது. திவாகரத்தில் நரந்தம் நாரத்தை என்று சொல்லியிருப்பதால்

நச்சினார்க்கினியர் நாரத்தை என்று பொருள் கொண்டார். நரந்தம் Cymbopogon nardus என்று அறிவியலில் அழைப்பர்.

நாகம் என்றொரு மரம் கூறப்பட்டுள்ளது. இது நாககேசரா என்று வடமொழியில் அழைக்கப்படும் மரமாகும். இது மலைகளில் காணப்படும். இது வாழும் சூழ்நிலையில் இதன் மரங்கள் கூட்டமாகத் தென்படும். இதைச் சங்கநூலில் ஒரு பாட்டு (சிறுபாணாற்றுப் படை) (87-88, 108-109) குறிப்பிட்டுள்ளது. நாகத்திற்கு நிறைய மகரந்தம் உண்டு. இதுMesua ferrea என்றழைக்கப்படும், பிற சங்கநூல்களிலும் கூறப்பட்டுள்ளது. நாகப் பூ வெண்மையாக இருக்கும்.

நள்ளிருள் நாறி என்பதை உரையாசிரியர் இருவாட்சி என்று கூறியுள்ளார். இருவாட்சி என்று இருள்வாசி என்ற பொருளில் நச்சினார்க்கினியர் கூறியுள்ளார். இருவாய்ச்சி என்பதே இருவாட்சி ஆனது, இது பெருவாய் என்று பதிற்றுப்பத்தில் (9 : 81 : 25) அழைக்கப்பட்டுள்ளது. பிங்கலந்தை நிகண்டு இதனை ஒருவகை மல்லிகை என்றும் மயிலை என்றும் அழைத்துள்ளது. இஃது ஒருவகை மல்லிகையாகும். இரவில் பூப்பது. இதை Jasminum sambac என்று அறிவியலில் அழைப்பதாகத் தெரிகின்றது.

இருங்குருந்து பெரிய குருந்த மரமாகும். இதன் பழம் ஆரஞ்சுப் பழம் போலிருக்கும். ஆனால் கசக்கும். குருந்து, பெருங்குருந்து ஆகிய இரண்டும் ஒரே இனத்தைச் சேர்ந்தவை. இருங்குருந்தை Atlantis spinosa என்றழைப்பர். பெருங்குருந்தை Atlantis missionis என்றழைப்பர்.

வேங்கை மரம் தெரிந்ததொன்றாகும். சங்கநூல்களில் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளது. வேங்கை மரத்தை அறிவியலில் Pteroscarpus marsupium என்றழைப்பர்.

குறிஞ்சிப்பாட்டில் இறுதியாகக் கூறியுள்ள மரத்தை எளிதில் கண்டுபிடிக்க முடியவில்லை. புழகு என்பதைச் சிவந்த பூவையுடைய எருக்கம் பூ என்று உரையாசிரியர் கூறியுள்ளார். குறிஞ்சிப் பாட்டில் கூறிய புழகை மலைபடுகடாம் என்ற சங்கநூல் மட்டும் கூறியுள்ளது. இதைச் சிவந்த மலருள்ள எருக்கம் பூ என்றும் அரக்கு நிறம் உடையதென்றும் உரையாசிரியர் கூறியுள்ளார். சிவந்த பூவையுடைய எருக்கம் என்று கொண்டால் இதை அறிவியலில் Calotropis g gantia என்று கருத வேண்டும். இயற்கையில் சிறிது சிவந்த எருக்கம் பூச்செடி உள்ளது. ஆனால் எருக்கம் பூவைச் சிறந்த பூவாகக் கருதுவதில்லை. அதனால் புழகு வேறு செடியாகவோ மரமாகவோ இருக்கலாம்.

(தொடரும்)

# தொல். மொழிக்கோட்பாடு

க. வீரகத்தி.

## 1. கருவியும் செய்கையும் :

எழுத்ததிகார இலக்கணச் செய்திகளைக் கருவி செய்கை என இருவகைப்படுத்தி இலக்கணநூல்கள் கூறும். தொல்காப்பிய எழுத்ததிகாரம் நூல்மரபு முதலிய நான்கு இயல்களால் கருவியையும் தொகை மரபு முதலிய ஐந்து இயல்களால் செய்கையையும் கூறியது. கருவியை மேலும் பொது சிறப்பு என இருவகைப்படுத்திப் புணரியலுள் கூறப்படுவன செய்கை ஒன்றுக்கே உரிய கருவி ஆதலின் சிறப்புக் கருவி எனவும் முதல் மூன்று இயல்களிலும் கூறப்படுவன பொதுக்கருவி எனவும் சிவஞானமுனிவர் கூறுவர்.[1]

கருவி இலக்கணம் கூறும் இயல்களில் ஒன்றன மொழிமரபில் ஓரெழுத்தொருமொழி ஈரெழுத்தொருமொழி இரண்டிறந்திசைக்கும் தொடர்மொழி எனத் தொல்காப்பியம் மொழிப்பாகுபாடு செய்துள்ளது.[2] நன்னூல் தனியெழுத்துமொழி தொடரெழுத்துமொழி என இரண்டாகப் பகுத்தது.[3]

## 2. மொழிப்பாகுபாட்டுக் காரணம் :

**2. 1.** நன்னூல் பதங்களைத் தனியெழுத்துப்பதம், தொடரெழுத்துப்பதம எனப் பிரித்துக்கொள்ளத் தொல்காப்பியம் மூவகைப் பாகுபாடு கொண்டதேன் என்ற கேள்வி எழுகின்றது. தொல்காப்பியப் பாகுபாட்டுக்கான மொழியியல் ஏதுக்கள் உண்டெனில் அவை எவை ஆகலாம்?

ஈரெழுத்துமொழி என ஒரு பிரிவு எதற்காக என்ற வினவை இலக்கண உலகில் முதன்முதலாக எழுப்பியவர் சிவஞானமுனிவரே. உயிர்த்தொடர்க்குற்றியலுகரத்தில் இருந்து ஈரெழுத்தொருமொழிக் குற்றியலுகரத்தை வேறு பிரிததது ஏன் எனற வினு மேற்படி வினவையும் உள்ளடக்கியதாகும். கேள்வியும் பதிலும் ஆக முனிவர் சொல்வது :

"இனி, நாகு காசு என்புழியும் நீடாது குறுகாது என்புழியும் கெட்டுயிரிறுதிக்குற்றுகரமே ஆகவும் நாகு என்பதனை

---

1. சூ.வி. நாவலர் பதிப்பு 1952 : 19.
2. தொல். 45.
3. நன். 128.

நெடிலிறுதிக்குற்றுகரம் எனவும் நீடாது என்பதனை உயிர்த் தொடர் மொழிக் குற்றுகரம் எனவும் ஆசிரியர் கொண்டது ஈரெழுத்தொருமொழி எனவும் இரண்டனை இறந்த தொடர் மொழி எனவும் பகுத்துணர்ந்துகோடல் பொருட்டாயினும்...''[4]

ஈரெழுத்தொரு மொழி இரண்டிறந்திசைக்கும் தொடர்மொழி எனப் பகுத்துணர்ந்து கொள்வதற்காக உயிர்த்தொடர்க்குற்றுகரத்தி லிருந்து நெட்டுயிரிறுதிக்குற்றுகரத்தை ஆசிரியர் பிரித்துக் கொண்டார். அதாவது நெட்டுயிரிறுதிக்குற்றுகரம் என்ற ஒரு குற்றுகர வகைக்காக ஈரெழுத்து மொழியென மொழிப்பாகுபாட்டில் ஒருவகை கண்டார் என்பது பொருள். அங்கே செய்கை செய் வதற்காக இங்கே கருவி செய்துகொண்டார் என்று இன்னொரு விதமாகச் சொல்லலாம். இக்கருத்தே பலராலும் திரும்பத் திரும்ப மறுதலிக்கப்பட்டும் வருகிறது. முனிவர் கருத்தை ஒத்துக்கொள்ள முடியவில்லை.

2. 2. உயிர்த்தொடர்க்குற்றியலுகரத்தில் இருந்து ஈரெழுத் தொரு மொழிக்குற்றியலுகரம் வேறுபடுத்தப்பட்டது ஏன் என்ற கேள்வியும், குற்றியலுகரம் அறுவகைப்படுத்தப்பட்டது ஏன் என்ற கேள்வியும் சாராம்சத்தில் ஒன்றே. கன்னன் தருமனிலிருந்து பிரித்து வைக்கப்பட்டதேன் என்ற வினவும் கன்னன் ஐவரிலிருந்து தனியாக்கப்பட்டதேன் என்ற வினவும் ஐவர் என்னும் ஏதோ ஒரு அடிப்படையான தொகுதியில் தருமனும் ஒருவனாகையால் ஒரே விடைக்குரியனவே. குற்றுகரம் தொடர்பான மேற்படி வினக்களும் இதுபோன்றவையே. அன்றியும் குற்றுகரம் அறுவகைப்படுத்தப் பட்டதேன் என்ற ஒரு வினவுக்கு அவசியமும் இல்லை.

தொடர்மொழிக்குற்றியலுகரங்களில் ஈற்றயல் எழுத்தே புணர்ச்சி வேறுபாட்டுக்குக் காரணமாவதால் ஈற்றயலெழுத்து அடிப் படையில் அவற்றை ஐவகைப்படுத்தி அவற்றுடன் ஈரெழுத்தொரு மொழிக்குற்றியலுகரத்தையும் சேர்த்து ''ஆயிரு மூன்றே உகரம் குறுகிடன்''[5] எனக் குற்றியலுகரப் புணரியல் முதல் நூற்பாவில் தொல்காப்பியம் சொல்லும் அவ் அறுவகைக் குற்றியலுகரத் தொகுப்பை நச்சினார்க்கினியர் சரியாக விளக்கியும் உள்ளார்.

'தொடர்மொழியீற்று' (எழு-36) வருமென்று ஆண்டுக் கூறியவதனை ஈண்டு ஐந்துவகைப்படுத்தி அதனோடு 'நெட்டெழுத் திம்பரும்' (எழு-36) என்றது ஒன்றேயாதலின் அதனையுங்கூட்டி அறுவகைத்தென்றார்.

---

4. சூ.வி. நாவலர் பதிப்பு 1952 : 29-30.
5. தொல். 406.

எழுத்திலக்கணத்தைப் பன்னிருவகைப்படுத்தி[6] முதற் பத்தையும் ஒரு பகுதியாகவும் பதம் புணர்பு என்ற இரண்டையும் மறு பகுதியாகவும் 'என்று' என ஓர் எண்ணிடைச்சொல் கொடுத்துப் பிரித்ததுபோல நச்சினார்க்கினியரும் அதனோடு என ஒடுக்கொடுத்துப் பிரித்ததற்குப் பொருள் உண்டு. அது பின்னாலே விளங்கும்,

புணர்ச்சி வேறுபாட்டுக்காகத்தான் மொழிமரபில் ஈரெழுத் தொருமொழி தொடர்மொழி எனப் பிரித்துக்கொண்டார் என்றால் நூல்மரபில் குற்றியலுகரம்பற்றிய பொதுவிளக்கத்தைத் தந்துவிட்டு, அதாவது நெட்டெழுத்திம்பரும் தொடர்மொழியீற்றுமான மொழிகளில் வரும் எனக் கூறாமல் புணரியலில் வைத்தே புணர்ச்சி அடிப்படையில் அறுவகைப்படுத்தி இருக்கலாம்.

புணர்ச்சியில்கூட உயிர்த்தொடர்மொழிக்கும் நெடிற்றொடர் ஈரெழுத்துமொழிக்கும் எவ்வித வேறுபாடும் இருப்பதாகத் தெரியவில்லை.

"ஈரெழுத்து மொழியும் உயிர்த்தொடர் மொழியும்
வேற்றுமை ஆயின் ஒற்றிடை இனம்மிகத்
தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி" (411)

"ஒற்றிடை இனம்மிகா மொழியுமா ருளவே
அத்திறத்து இல்லை வல்லெழுத்து மிகவே" (412)

"ஈரெழுத்து மொழியும் வல்லொற்றுத் தொடரும்
அம் இடை வரற்கும் உரியவை உளவே
அம்மரபு ஒழுகும் மொழிவயி னான" (417)

முதல் நூற்பாவின்படி ஈரெழுத்துமொழிக்கும் உயிர்த்தொடர் மொழிக்கும் புணர்ச்சி வேறுபாடு இல்லை. இரண்டாவது நூற்பா இரண்டுக்கும் சேர்ந்ததான விதிவிலக்குப்பற்றியது, நச்சினார்க் கினியரும் 'இஃது எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது' எனக் குறிப்பிடுவர். முறையே நாகுகால், வரகுகதிர் என உதாரணமும் தருவர். எனவே இங்கும் வேறுபாடில்லை. மூன்றாவது நூற்பா ஈரெழுத்துமொழியும் வல்லொற்றுத் தொடருமான நிலைமொழிக்கு இடையில் அம் சாரியை வந்து முடிவதற்கும் உரியன எனக் கூறும். இங்கே உயிர்த்தொடர்மொழியிலிருந்து ஈரெழுத்தொருமொழித் தொடர் ஒரு சாரியையைப் பொறுத்த அளவில் சிறிது வேறுபடுத் தப்படுகிறது. இந்நூற்பா எழுதும்போது தொல்காப்பியனார்

6. நன். 57.

பயற்றங்காயை* மறந்துவிட்டனர் போலும். இந்நூற்பாவின் கீழ் முடித்துக்காட்டவேண்டிய பயற்றங்காயை "மரப்பெயர்க்கிளவிக்கு அம்மே சாரியை" என்ற நூற்பாவில் முடித்துக்காட்டுவர் நச்சினார்க்கினியர், அகக்காழ், புறக்காழ்' என்ற முறையில் கமுகங்காய் மேற்படி நூற்பாவினுல் முடித்துக்காட்டப்பட்டது சரி, பயற்றங்காயை இங்கே முடித்துக்காட்டுவதற்கு எந்த நியாயமும் இல்லே. 'அம்மரபு ஒழுகும் மொழி' என்பதால் இறுதி நூற்பாவின் கீழ் பயற்றங்காயை முடித்துக்காட்டுவதே பொருத்தமாகும்.

எனவே, உயிர்த்தொடர்மொழியையும் ஈரெழுத்துமொழித் தொடரையும் புணர்ச்சி நோக்கில் வேறுபடுத்த வேண்டுவதில்லே, இதனுலேதான் சிவஞானமுனிவர் கருத்துடன் ஒத்துப்போக இயலவில்லே என முன்னே கூறப்பட்டது.

**2. 3** மொழியை மூவகைப்படுத்திஞர் தொல்காப்பியஞர், குற்றியலுகர விளக்கம் தரும்பொழுது ஓரெழுத்துமொழி ஈரெழுத்து மொழி தொடர்மொழி என்பவற்றில் குற்றியலுகரம் மூவகை மொழிகளிலும் வருமா அல்லது எவ்வகை மொழிகளில் வரும் என்ற விஞக்களுக்கு விடை தரவும் கடமைப்பட்டவர். ஓரெழுத்து மொழியில் குற்றுகரம் நிற்கக்கூடிய ஒலிச்சூழ்நிலே இல்லே; ஈரெழுத்துமொழியிலும் தொடர்மொழியிலும் உண்டு, அதனுலேதான் நெட்டெழுத்திம்பரும் தொடர்மொழியீற்றும் நிற்கும் எனக் கூறிஞர். அன்றிப் புணர்ச்சி வேறுபாடு கருதும் செய்கைக்காகக் கூறவில்லே. ஈரெழுத்துச் சொற்களெல்லாம் ஈரெழுத்துமொழிக் குற்றியலுகரங்களும் அல்ல, அப்படியாளுல் ஈரெழுத்து மொழிப் பிரிவுக்கான காரணம் என்ன என்று அறிதல் வேண்டும்.

## 3. ஈரெழுத்து மொழிப் பாகுபாடு :

தமிழில் ஈரெழுத்துமொழிகள் தமக்கெனத் தனித்துவமான தன்மையைக் கொண்டவை. இவ்வாருன மூவகை மொழிப்பாகு பாட்டை, தான் வகுத்துக் கொள்ளவில்லே; தொன்றுதொட்டு வழங்கிவரும் நெறிப்பாடு உடையன என்று நேர்மையாகச் சொல்லியும் விடுகிருர்—"மூன்றே மொழிநிலே தோன்றிய நெறியே" என நூற்பாவை முடித்துக் கொள்கிருர் தொல்காப்பியஞர்.

---

* பயறு + அம் + காய் = பயற்றங்காய், பாசிப்பயறிலிருந்து வேறு படுத்திக் காட்டுவதற்குப் பயற்றங்கொடிக் காய்க்கு அம் சாரியை கொடுத்து வித்தியாசப்படுத்தப்பட்டது. பயிறு எனவும் இக்காலத்து வழங்கும்.

"புறக்கா ழனவே புல்லென மொழிப
அகக்கா ழனவே மரம்என மொழிப" (1585)

''ஓரெழுத்து ஒருமொழி ஈரெழுத்து ஒருமொழி
இரண்டிறந்து இசைக்கும் தொடர்மொழி உளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே'' (45)

ஈரெழுத்துமொழிக்குத் தனித்துவமான தன்மை இருப்பதனாலேதான் மொழிநிலை தோன்றிய நெறி எனப்பட்டது. மொழியியலில் ஈரெழுத்துமொழி தானாகத் தோன்றியது என்றாலும் சரி, அல்லது மொழியியல் தோற்றுவித்தது எனறாலும் சரி செயற்கைப்பாடு இல்லை என்பது பொருள் ஆகும்.

தொல்காப்பியனார் சொற்களை மூவகைப்படுத்தியமைக்குச் சில காரணங்கள் தெரிவிக்கப்பட்டுள்ளன. சிலபல என்னும் தமிழ் வழக்கு நோக்கி மூவகைப்படுத்தப்பட்டதென்பர் நச்சினார்க்கினியர். யாப்பருங்கலக்காரிகையில் மேற்கோளாகக் காணப்படும் நூலறுந்த நூற்பா[8] ஒன்று வடநூல் இரண்டல்லவை பல எனக் கூறும் என்றது. இதைக்கொண்டு போலும் வடமொழி வழக்குப்பற்றி மூவகைப் படுத்தப்பட்டது என்பவரும் உளர். 'செய்கைக்காக' என்பர் சிவஞானமுனிவர், ஒட்டுமொத்தமாக இக் காரணங்களை நிராகரிக்க வேண்டியுள்ளது. ஈரெழுத்துமொழி தனித்துவமான தன்மை கொண்டது என்ற காரணத்தாலேதான் மொழிப்பாகுபாட்டில் தனிப்பிரிவாக இடம்பெற்றது:

**3. 1** சங்க இலக்கியமும் ஒன்று இரண்டு பல என்ற தமிழ் வழக்கு நிலையைக் குறிபபிடத் தவறவில்லை.

''ஒருநாள் செல்லலம் இருநாள் செல்லலம்
பலநாள் பயின்று பலரொடு செல்லினும்[9]''

''மழைபெயல் மாறிய கழைதிரங்கு அத்தம்
ஒன்றுஇரண்டு அலபல கடந்து''[10]

**3. 2** தமிழ்மொழி ஒரு ஒட்டுநிலைமொழி. எந்தச் சொல்லிலும் அடிச்சொல்லே பொருள் உணர்த்துவது. ஏனைய ஒட்டுகள் திணைபால் எண் இடம் காட்டும் அல்லது ஒளித்துணை உருபனாக நிற்கும். அடிச்சொல் அல்லது பகுதிச்சொல்லில் ஒலிநய ஒட்டுகளை நீக்கி விட்டால் ஓரெழுத்துமொழியாக அல்லது ஈரெழுத்துமொழியாகவே நிற்கும். ஒட்டுகள் சேர்ந்தநிலையே தொடர்மொழியாகும். இ. கொ. ஆசிரியரும் வினைப்பகுதியைத் தன்வினையெனவும் வினைப்பகுதியுடன் விகுதி முதலியன சேர்ந்த

8. யா. கா. 22 உரை.
9. புறம். 101 : 1-2
10. பதிற். 41 : 14-15

அமைப்பைத் தொடர்வினையென்றும் அழைப்பது[11] இங்கு அறியத் தக்கதாகும். தமிழ்மொழி இயல்புக்கு ஓரெழுத்துமொழி ஈரெழுத்துமொழி தொடர்மொழியெனப் பாகுபடுத்துவதே உடன்பாடானதாகும்.

3.3 ''நெடியதன் முன்னர் ஒற்றுமெய் கெடுதலும்
குறியதன் முன்னர்த் தன்னுரு இரட்டலும்
அறியத் தோன்றிய நெறியியல் என்ப'' (160)

ஈரெழுத்துமொழிகள் புணர்ச்சியில் தனிப்பாங்கானவை. தனிக்குறில்மெய் உயிர்வரும்போது இரட்டுகிறது. தனிநெடில்மெய் வல்லினம் வரும்போது கெட்டுவிடுகிறது. இத்தன்மையும் பல காலம் முன்னராகவே தோன்றிய நெறிப்பாட்டு இயல்பினைக் கொண்டதென மேற்படி நுற்பா கூறுவதை அவதானிக்க வேண்டும். ஏனைய இனம் வரும்பொழுது வந்த இனம் மிகுந்து கொள்ளும். எழுத்துமொழியிலும் பேச்சுமொழியிலும் தொன்று தொட்ட இவ் இயல்பைக் காணலாம்.

| | | |
|---|---|---|
| கோர்வை* | > | கோவை |
| மேய்ந்து | > | மேஞ்சு |
| காய்ச்சல் | > | காச்சல் |
| நீர்த்து | > | நீத்து |
| நீர்ச்சிரங்கு | > | நீச்சிரங்கு |
| சீர்/ழ்த்தலை | > | சீத்தலை |
| சீர்காழி | > | சீகாழி |
| கால்வாய் | > | காவாய் |
| காற்பணம் | > | காப்பணம் |
| காற்போத்தல் | > | காப்போத்தல் |
| கோள்நிமிர்ந்தது | > | கோணிமிர்ந்தது |
| தோள்நல்லது | > | தோணல்லது |
| செய்நன்றி | > | செய்ந்நன்றி |
| தேன்மொழி | > | தேமொழி |
| மெய்ஞானம் | > | மெய்ஞ்ஞானம் |
| கைமாறு | > | கைம்மாறு |

11. இ.கொ. 65.

*கோர் என்பதே ஓர், வார், பார் ஆதியவற்றை நோக்கும்போது வினையடியாதல் வேண்டும். ரகரம் உச்சரிப்பு இழந்தநிலையில் கோ எனப்பட்டு அதுவே இலக்கிய மொழிவழக்குப் பெற்றுவிட்டது. பேச்சுமொழியில் இன்றும் கோர்க்காலி கோர்வை எனவே சொல்லப்படும்.

"மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே"—45

"அறியத் தோன்றிய நெறியியல் என்ப"—160.

இவ் ஈரடிகளையும் கூர்மையாக நோக்கும்போது ஈரெழுத்து மொழிகளின் தனிவழிப்புணர்ச்சி நோக்கித்தான் மொழிப்பாகுபாட்டில் ஈரெழுத்தொரு மொழி என ஒரு பிரிவு கொள்ளப்பட்டது என்று எண்ணத் தோன்றுகிறது.

3. 4 அதிகம் தொடர்பற்றதெனக் கருதப்பட்டாலும் ஓரெழுத்து. ஈரெழுத்துகள் பலவான இலக்கணநிலைக்குத் தளம் ஆகப் பயன்படுவதையும் கவனிக்கலாம்.[1] குறில் இணைவினைப் பகுதிகளிற் சில இரட்டும் தன்மை உள்ளவை.[2] ஓரெழுத்தும் ஈரெழுத்தும்தான் யாப்பமைப்புக்கு முதற்படியான அசைகளை ஆக்கித்தருவன.[3] அஃகேனமும் இதர ஒற்றுகளும் அளபெடை கொள்வது தனிக்குறிலான ஓரெழுத்துக்கும் இணைக்குறிலான உயிரெழுத்துக்கும் பின்னர் மாத்திரமே. ஒருவேளை தனிக்குறில் முன்னொற்று இரட்டுதல்தான் ஒற்றளபெடைக்கு முன்னோடியாக இருந்திருத்தலும் கூடும்[4] இணைக்குறில் ஒற்றுமொழிகள் நெடிலொற்று மொழிகளாக மாற்றம் பெற்றுக்கொண்டு வருவதை நோக்க ஈரெழுததுமொழிக்குள்ள தொன்று தொட்ட மொழியியல் நிலைமையும் புலனாகிறது.

1. நகு > நக்கு, தொடு > தொட்டு, உறு > உற்று.
2. க, கரு, கூ, குடா (மெய் தவிர்ந்த அடிப்படை அசைகள்)
4. வியர் > வேர்

முகம் > மோம் (பேச்சுமொழி)

மயல் > மால்

நோகும் > நோம் (பேச்சு மொழி)

ஆகும் > ஆம்

போகும் > போம்

பெயர் > பேர்

இவற்றையெல்லாம் கவனத்திற்கெடுக்கும்போது ஈரெழுத்தொருமொழிப்பாகுபாடு ஈரெழுததொருமொழிக்குற்றியலுகரத் தொடர்ப்புணர்ச்சி நோக்கிய கருவியமைபபுக்காக அல்ல, மொழியின் தொன்றுதொட்ட இயல்புக்குரியது எனக் கொள்ளவேண்டியுள்ளது.

———

# கிள்ளாய், கிள்ளாய் !

[பூசை. சுப்பையாபிள்ளை, எம்.ஏ., பி.எட்.,]

கிள்ளாய் கிள்ளாய் செம்மூக் கிள்ளாய்
வயற்படு நாற்றின் பசுமைபடர்ந் தன்ன
வியற்படு பாசுடற் செம்மூக் கிள்ளாய் !
நீயு நினது காதலம் பேடுந்
தூய தமிழ்பல வாயும் பாண்டியிற்
செக்கா ரக்குடிச் சென்றனி ராயின்,
றக்கோர்க் கண்டு தருணமறிந் துரைமி :
னின்றித் தமிழ்நா டெய்துறூஉம் பல்வகைக்
கீழ்மைகண் டஞ்சிக் கிளக்கவு மாட்டா
வேழையே, னூல்செய் யியல்பிலார் கழறும்
புதுக்கவி தைக்குப் புறங்கொடுத் தோடியு
மதுக்குடி யாளர்க்கு வாய்புதைத் தும்பெண்
விடுதலை கேட்கு மெல்லியர்க்கு நாணியுங்
கெடுதல் செய்திடுங் கிழமைநாண் மாதப்
பத்திரி கைக்குப் பயந்துஞ் சத்தியி
னுத்தமப் பெண்ணுயிர் மானஞ் சிதைத்திடுந்
திரைப்படத் தாளர் செய்கைகண் டரற்றியு
மரமற மென்று மழைமயை யென்றுங்
கல்கள் ளென்றுங் கள்கல் லென்றுஞ்
சொல்வல் லோர்க்குத் தோற்று மிலக்கண
விலக்கிய மறியா ருயர்வுகண் டேங்கியு
முலகா யதமுருத் திடித்தஞ் ஞான
மழைதர வடியா ரந்தணர் மாண்பெலாந்
தழைத்திடா துணங்குந் தன்மைக்கு வாடியு
மேலோர் நூலோர் மெலிவுகண் டிளைத்து
ஞாலத் துள்ளோ ரித்தனை நடப்புங்
கண்டுங் காணு தவர்போ லிருப்பதைக்
கண்டுநெஞ் சுருகக் கண்ணீ ருகுத்துங்
கண்ணிணை மூடியுங் காதிணை யடைத்து
மெண்ண மடக்கியு மிருகைகாற் கட்டியு
முடற்பையு ளிருக்கு முயிரொடு
படப்பையி லிருக்கும் பரிசீ தென்றே.

———

# செய்திகள்

## நாட்டிய அரங்கேற்றம்

21-5-85 அன்று மாலை, சென்னை, தியாகராய நகரிலுள்ள டாக்டர் பூ. இராமராவ் திருமண மண்டபத்தில், சை. சி. நூற் பதிப்புக்கழகச் செயற்குழு உறுப்பினர் திரு. இரா. சுந்தரம்பிள்ளை பி. ஏ., பி. எல்., அவர்களின் பெயர்த்தியரும், சென்னைக் குடிசை மாற்றுவாரிய செயலாக்கப் பொறியர் திரு. ஜி. சுப்பிரமணியம், எம். இ. அவர்களின் மக்களுமான செல்வியர் சுதா, வசுதா ஆகியோரின் பரதநாட்டிய அரங்கேற்றம் மிகச் சீருஞ் சிறப்புமாக நடைபெற்றது. தமிழக வீட்டுவசதி வாரியத் தலைவர் திருப்பூர் மணிமாறன், குடிசைமாற்றுவாரியத் தலைவர் திரு. எண். வி என். செல்வம். குடிசை மாற்றுவாரியத் தலைமைப் பொறியர் திரு. தி. பி. காளியப்பன், பி. இ. ஆகிய பெருமக்களின் முன்னிலையில் நடைபெற்ற இவ் விழாவிற்கு அரசாங்கப் பெருமக்களும், பெற்ருேர் களும் ஏராளமாக வந்து சிறுமியர்களின் கலைநுணுக்க மிக்க பரத நாட்டியத்தைக் கண்டுகளித்ததோடு இச் சிறுமிகட்குப் பரதநாட் டியம் பயிற்றுவித்த நவரசக் கலாநிகேதன் நடனப் பள்ளியின் ஆசிரியர்கள் தி. வி. நரசிம்மன், எம் வி. முகுந்தராஜ், எம். வி. நந்தகோபால் ஆகியோரையும் பாராட்டினர். பதினெரு நடனக் காட்சிகளைத் திறம்பட நடித்த இக் கலைச் செல்வியர் மேன்மேலும் கலைத் துறையில் வளர்ந்து பேரும் புகழும் பெறுவார்களாக என வாழ்த்துகிறோம்.

## சென்னைக் குறளாயத் தொடக்க விழா

குறளாயச் செயல் வீரர் 4ஆம் மாநிலக் கூட்டமும் சென்னைக் குறளாயத் தொடக்க விழாவும் 12-5-85 அன்று சென்னை வள்ளுவர் கோட்டத்தில் சிறப்புற நடைபெற்றது. அன்று மாலை திரு. இரா. முத்துக்குமாரசாமி. எம். ஏ. பி. லிப், அவர்கள் தலைமையில் குறளாயப் பாட்டரங்கம் நடைபெற்றது. மாலை 7 மணிக்கு மேல் வேலா இராசமாணிக்கனர் குறளாயக் கொள்கை விளக்கம் செய் தார். முத்தமிழ்க் காவலர் முனைவர் கி. ஆ. பெ விசுவநாதம், திருக் குறளார், மாண்புமிகு அமைச்சர் கா. காளிமுத்து ஆகியோர் சிறப்புரை ஆற்றினர். முனைவர் த. அமிர்த லிங்கம் நன்றி நவின்ருர்.

## தருமையாதீனத்தில் அப்பர் அடிகள் வழிபாட்டு விழா

தருமையாதீனத்தில் 8-5-85 முதல் 13-5-85 முடிய திருநாவுக்கரசு அடிகள் வழிபாட்டு விழா நடைபெற்றது. திருமுறை முற்ருேதலில் புலவர்கள் தா. குருசாமி தேசிகர், சி. கல்யாணசுந்தரம், கு. மணிகண்ட ஓதுவார், யாழ். சீதாராமன், எஸ். நமசிவாயம், ஏ. டி. மாதவன் செட்டியார் ஆகியோர் கலந்து பணியாற்றினர். 13 5-85 ல் திருமுழுக்கும், மகேசுவர பூசையும், கருத்தரங்கும் நடைபெற்றன.

## மூர் அங்காடியின் அழிவு

தமிழ் நாட்டில் வெளியூர்களிலிருந்து சென்னை மாநகருக்கு வருவோர் இன்றியமையாது பார்க்க விழையும் இடங்கள் உயிர்க் காட்சிச் சாலை, பொருட் காட்சிச் சாலை, மீன் காட்சிச் சாலை, கடற் கரை என்பவற்றோடு மூர்மார்க்கட் எனப்படும் மூர் அங்காடியும் ஒன்று.

மூர் என்பவரின் பெயரால் ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் சென்னையின் நடுவிடத்தில் அமைக்கப்பட்டதோர் அழகிய கட்டிடம் இது. இது பல்பொருள் விற்பனைகட்கு உரிய ஓர் அங்காடி. இங்குப் புத்யன மட்டுமல்ல, பழையன, அரியன ஆகிய பல பண்டங்களும் கிடைக்கும். மையத்தொடர் வண்டி மூலம் வடக்கு நோக்கிப்பயணம் செய்வோர் பல பண்டங்களை உடனடியாக வாங்கிச் செல்ல அந்தச் சூழலில்— அந்த நாளில் அமைந்த ஒரு பெரிய அங்காடி இதுவெனில் மிகையன்று.

தமிழ்நாட்டில் வேறு எங்குங் கிடைக்காத அரிய நூல்கள் பல கிடைக்கக்கூடிய கடைகள் பல இங்கு இருந்தன. பொழுதுபோக்குக் காகப் பயன்படும் நூல்கள் மட்டுமல்ல. ஆராய்ச்சியாளர்க்குப் பயன் படும் பல்துறை நூல்களும் இங்கே கிடைக்கும். இதற்காகப் படித்தோர் பலர் இவ்வங்காடியை அல்லும் பகலும் சுற்றிவருவர். இத்தகைய அங்காடி கடந்த 29-5-85 அன்று இரவு தீக்கிரை யாகிய திடுக்கிடும் செய்தியினைத் தமிழன்பர்கள் அறிவர். இத் தீவிபத்தினால் ஏற்பட்ட இழப்புகள் பலவற்றுள் கற்றோர் எண்ணி வருந்தத் தக்கது, அங்கிருந்த புத்தகக் கடைகள் பல தீக்கிரையானமையே எனில் மிகையன்று. இப் புத்தகக் கடைகளில் அரிய நூல்கள் இருந்தன. அவையும் அழிந்துபட்டமை தமிழ் மொழிக்கு ஓர் இழப்பே ஆகும் என்பதில் ஐயமில்லை.

### முதுமையில் எளிமை !

சென்னை வள்ளுவர் கோட்டத்தில் 12-5-85 அன்று நடைபெற்ற குறளாய மாநாட்டில் சிறப்புரையாற்றிய முத்தமிழ்க் காவலர் டாக்டர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள், காலை 10 மணிமுதல் 2 மணி வரை ஒரே இருக்கையில் அமர்ந்து சோர்வின்றிப் பணியாற்றியதோடு இடைவேளையில் உணவு அருந்திய பின் வள்ளுவர் கோட்ட ''வராந்தா''வில் ஓர் ஓரத்தில் கையே தலையணையாகக் கொண்டு உறங்கி ஓய் வெடுத்துக் கொண்டு தொடர்ந்து பணியாற்றிய காட்சி என் உள்ளத்தைக் கவர்ந்ததோடு பட்டினத்தடிகளை நினைவூட்டியது. தமது 85ஆவது அகவையிலும் இப்படித் தமிழுக்கு அயராது உழைக்கும், தந்நலமற்ற முத்தமிழ்க் காவலர் வாழ்க! அவர் தம் பொதுப்பணிகள் வளர்க! வெல்க!

—சோ. சீனிவாசன், பல்லாவரம்.

## 'அன்னை இந்திரா ஒரு வெள்ளைப்புரு' வெளியீட்டு விழா

சொல்லாய்வுச் செல்வர். சு. வேல்முருகன் எம். ஏ., பி. எட்., எழுதிய இந்நூல் வெளியீட்டு விழா 26-4-85 அன்று புதுவை சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கத்தில் முதுபெரும் புலவர் சுந்தர சண்முகனுர் தலைமையில் நடைபெற்றது. கல்லாடன் வரவேற்புரை நிகழ்த்தினர். புதுவை நலவழித்துறை அமைச்சர் மாண்புமிகு ப. கண்ணன் அவர்களும் அறிஞர் பலரும் வாழ்த்துரை வழங்கினர்.

## மறைமலையடிகள் நூலக வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் இதழ் ௬அசஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் (கழக ஆட்சியர்) | 10 | 00 |
| திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்) | 5 | 00 |
| கழகச் செயற்குழு உறுப்பினர் திரு. இரா. சுந்தரம்பிள்ளை பி.ஏ., பி.எல். ('அவர்தம் பெயர்த்திகளும், திரு. ஜி. சுப்பிரமணியம் எம். இ. அவர்களின் மக்களுமான, செல்வியர் சுதா, வசுதா ஆகியோரின் நாட்டிய அரங்கேற்றத்தை முன்னிட்டு) | 25 | 00 |
| திரு. K. வேணுகோபால் அவர்கள் மேலாளர், சாந்தி தியேட்டர், சென்னை-2 (தம் அன்னையார் நினைவாக) | 25 | 00 |
| இஸ்லாமிய தமிழ் இலக்கியப் பேரவை, சென்னை | 50 | 00 |
| பேரா. மு. ச. சிவம், ஆசிரியர் 'வளரும் தமிழ்' ஈரோடு, ('வளரும் தமிழ்' இதழ் வெளியீட்டை முன்னிட்டு) | 20 | 00 |
| திருமுருக விசாகநம்பி அவர்கள் (மே, சூன்) | 10 | 00 |
| கயப்பாக்கம் திரு. முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள் | 5 | 00 |
| திரு. A. T. A. ஈஸ்வர் அவர்கள் | 5 | 00 |
| சூரன்குடி திரு. அ. ஆறுமுகம் அவர்கள் | 5 | 00 |
| கல்லை. தே கண்ணன் அவர்கள் (ஆசிரியர் 'வள்ளுவர்வழி') | 5 | 00 |
| தூத்துக்குடி திரு. ந. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் | 5 | 00 |
| டாக்டர் சரளா இராச கோபாலன், சென்னை | 20 | 00 |
| திரு முனைவர் வி. ப. கா. சுந்தரம் மதுரை | 10 | 00 |
| திரு. பண்டித க. வீரகத்தி, சிறப்பாய்வாளர் தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சை | 10 | 00 |
| திரு. ஜி. சொக்கலிங்கம், பிஷப் கார்டன், சென்னை-28 (மகள் திருமண நன்கொடை) | 10 | 00 |

———

# மதிப்புரை

## பாண்டித்துரைத் தேவர் பாடிய காவடிச்சிந்து

[பதிப்பாசிரியர்: க. சி. கமலையா. வெளியீடு : தமிழ்ப்புத்தகாலயம், 58, டி. பி. கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5 பக்கம் : 2+72 : விலை : உருபா 8.]

பாண்டித் துரையார் பாடிய காவடிச் சிந்து 1910 இல், மதுரை, தமிழ்ச் சங்க முத்திரா சாலைப் பதிப்பாக வெளிவந்தது. அப் பதிப்பின் ஆசிரியர் மு. ரா. அருணசலக்கவிராயர். அந் நூற்படி கிடைத்தலின் அருமைப்பாட்டைத் தம் பட்டறிவால் அறிந்த இப்பதிப்பாசிரியர், அப்பாட்டைப் பிறகும் படாமல் எளிதில் நூல் கைவரப் பெறவும், முந்தைப் பதிப்பின் முழுநலமும் வாய்க்கப் பெறவும், நூல்நயம் உணர்ந்து நூலாசிரியர் திறம் அறிவரப் பெறவும் கருதி இப் பதிப்பைக் கொணர்ந்துளார். ஒரு பதிப்பில் இருபதிப்புச் சீர்மை இயைந்தது இது!

இராமநாத புரத்தைச் சார்ந்த சிவஞானபுரத்துத் திருமுருகன் மேல் பாடப்பட்டது இக்காவடிச் சிந்து. இதில் பன்னிரு பாடல்கள் உள. இவ் வெண்ணிக்கையில் எண்ணம் வைத்த இப் பதிப்பாசிரியர், 'பன்னிரு தோளனைப் பன்னிரண்டு சிந்துகளில் பாடிப் பரவி ஆசிரியர் உளமகிழ்கிறார்' என்கிறார். அண்ணமலை ரெட்டியார் பாடிய காவடிச் சிந்துகளுடன் ஒப்பிட்டுள்ள பழம் பதிப்புக் குறிப்பைப் போற்றும் இப் பதிப்பாசிரியர், அதற்கு விளக்கமும் தருகிறார். வரலாறு, சிற்பம், சமயம், இலக்கியம் ஆகிய பலதுறைக் குறிப்புகளைத் தகவாகத் தந்து எடுத்த பொருளை விளக்குகிறார் (பக். 5, 8, 25, 30, 33, 53) ஆய்வாளர்க்குப் பயன்படும் வண்ணம் சொல்லடைவும், எளிதில் பொருள் அறியும் வண்ணம் பாடற்கு முற்படு பொருள் விளக்கமும் தந்துள்ளமை பாராட்டுக் குரியன.

எளிய பாடலும் பொருள்காணலில் எவ்வாறு எளிதாக ஏமாற்றும் என்பதற்கு 'நல்கார் தனம்' (3) என்பது சான்றும். இது, 'ஈயாக்கருமிகள் செல்வம்' என இயல்பாகப் பொருள் கொள்ளத் தக்கது. ஆனல், 'தனம்' வேறு பொருள் கொள்ளுமாறு மயக்கி விட்டமையால் அதற்கு விளக்கம் தந்து பொருத்திக் காட்டும் இடரும் நேர்ந்து விட்டது (பக். 13) பதிப்பாசிரியர்க்கு!

"அடலொழியத் தனி சுடரயிலைத் தொடுமய்யனே—அகல்
கடலுலகிற் பல இடர்களொழித் தருள் செய்யனே" (2)

"தொல்லை தீரவே றெல்லை வாவெனச்
சொல்லினும் புரிவேனே" (8)

என்பன போன்ற தொடர்கள் பாண்டித்துரையார் இசைப் புலமையையும் இலக்கியப் புலமையையும் ஒருங்கே காட்டவல்லன.

நூலின் அகமும் புறமும் அழகாய் அமைந்துள. முருகடியார், பண்ணோடிசைத்துப் பாடி வழிபடத்தக்கவை இக் காவடிச் சிந்துப் பாடல்கள்.

இரா. இளங்குமரன்.

## சமய சாத்திர அகராதி

(A. Dictionary of Religion and Philosophy)

[தொகுப்பாசிரியர்: தி. கி. நாராயணசாமி, 2, சீதாராம நகர், கடலூர் (தெ. ஆ) 607001, விலை: உருபா. 12/- பக்கங்கள் 164]

திரு. வி. க. நூற்றாண்டு நினைவு வெளியீடாக திரு வி. க. அவர்களின் அணுக்கத் தொண்டர் திரு. தி. கி. நாராயணசாமி அவர்கள் தொகுத்து வெளியிட்டிருக்கும் "சமய சாத்திர அகராதி" என்னும் இவ்வகராதி மெய்ப்பொருளியல் துறையில், குறிப்பாகச் சைவ சித்தாந்தம் பயில்வோர்க்குத் தேவையான குறிப்புகளைத் தருகின்றது. இதில் ஒவ்வொரு சொல்லுக்கும் சுருக்கப்பொருள் விளக்கமும், அஃது எந்த நூலிலிருந்து எடுக்கப்பெற்றது என்பதும் காட்டப்பட்டுள்ளன. சைவ சித்தாந்தம் பயில விரும்புவோர்க்கு இஃதொரு வழிகாட்டி நூல் எனினும் பொருந்தும். அத்துடன் சமய சாத்திர நூல்களைப் படிக்க விரும்பும் மாணவர்களுக்குத் துணை புரியும் வகையில் "தமிழ் நாட்டில் சாத்திர படிப்பு, முறை" என்ற தலைப்பினைப் பின்னிணைப்பாகச் சேர்த்திருப்பதும் ஒரு பயனுள்ள பணியாகும். ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

## பெரியார் சிற்றிலக்கியங்கள்

[ஆசிரியர்: புலவர் பா. நாராயணன், கபிலன் பதிப்பகம், 34, இராசாசி குடியிருப்பு, ஆத்தூர், சேலம் 636 102, விலை: உருபா. 6-5, பக்கங்கள். 112.]

அமெரிக்க நீக்கிரோ மக்களின் அடிமைத்தளையறுக்கத் தோன்றிய ஆபிரகாம் லிங்கன் போலவும், இந்திய மக்களின் விடுதலைக்கு வித்திட்ட காந்தியடிகளைப் போலவும், ஆரிய மேலாண்மையினின்று தமிழர் விடுபடவும் அறியாமை, முடநம்பிக்கை ஆகியவற்றினின்று விடுபட்டுச் சிந்திக்கும் ஆற்றலைப் பெறவும், அறுபது ஆண்டுகள் அயராது உழைத்தவர் பெரியார் ஈ. வே. ராமசாமி அவர்களாவார்.

அத்தகைய பெரியாரைப்பற்றிப் பல நூல்கள் முன்னரே வெளிவந்திருப்பினும், அவர்தம் கொள்கைகளில் பேரீடுபாடு கொண்ட ஆத்தூர் புலவர் பா. நாராயணன் அவர்கள் எழுதியிருக்கும் 'பெரியார் சிற்றிலக்கியங்கள்' என்னும் இந்நூல் புலவர் உலகம் போற்றத்தக்க வகையில் இரட்டைமணமாலை, கலம்பகம், காஞ்சி அமைப்புகளில் அமைந்து சொற்சுவை, பொருட் சுவை, கருத்துளம் ஆகியன நிரம்பியதோர் இலக்கியமாகத் திகழ்கின்றது. இதில் பெரியாரின் பண்பு நலன்கள், தொண்டுகள், ஈகைகள் (தியாகம்) ஆகியன நயம்படக்கூறப்பட்டுள்ளன. பெரியார் பெற்றி போற்றி வாழும் புலவர்கட்கு இந்நூல் சுவையும், பயனும் தரவல்லது. ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை-108. அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி. எம். ஏ., பி. லிட்.

## கழகப் புதிய வெளியீடுகள்

| | (அச்) |
|---|---|
| தமிழ் வளம்—தமிழகப் புலவர் குழு | |
| பாவாணர் கடிதங்கள்—கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் | 15 00 |
| அறிவியல் பூங்கா இராம் குமார் | 7 00 |
| 100 ஆண்டுகளுக்கு முன் திருநெல்வேலி மாவட்டம் —ச. சுந்தரராசன், நெல்லை | 25 00 |
| இன்பவல்லி (இலக்கிய நாடகம்) —கவிஞர் சி. து. கன்னிசாமி | 14 00 |
| மின் உற்பத்தியில் பன்முறைகள் —எஸ். சுந்தர சீனிவாசன், பி.இ., டி எல். எல். | 6 00 |
| குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் பாடல்கள் | 25 00 |
| கலைவளர்த்த திருக்கோயில்கள்—டாக்டர் இரா. கலைக்கோவன் | 15 00 |
| சிலப்பதிகாரம் மதுரைக்காண்டம் —நாவலர் ந. மு. வே. நாட்டார் உரை | 25 00 |
| அறிவியல் களஞ்சியம்—இராம் குமார் | 7 00 |
| அறிவியல் கொத்து ” | 7 00 |
| அறிவியல் பூங்கா ” | 7 00 |
| பட்டதெல்லாம் போதும்—சிறுகதைத் தொகுப்பு | 10 00 |

## தமிழ்ப் பல்கலைக் கழகப் புதிய வெளியீடுகள்

| | |
|---|---|
| Tamil Literature —Prof M. S. Purnalingam Pillai | 85 00<br>U. S S. 15 |
| மொழி நூல்—மாகறல் கார்த்திகேய முதலியார் | 75 00 |
| Tamil University Machine Translation System (TUMTS) Co-Authers: K. C. Chellamuthu K. Rangan K Murugesan | 75 00<br>U. S. S. 15 |
| A Study on the Thanjavur Art Plate —Prof. P. Saravanavel | 60 00<br>U. S S. 12 |
| நாமதீப நிகண்டு —கல்லிடை நகர் சிவசுப்பிரமணியக் கவிராயர் | 68 00 |
| மொழி நூற் கொள்கையும் தமிழ்மொழி அமைப்பும் —பேரா. கா. சுப்பிரமணிய பிள்ளை | 45 00 |
| Indians in South Africa — Prof. K. Nambi Arooran | 60 00<br>U. S. S. 12 |

நூல்கட்குக் கழிவு 25%—அஞ்சற் செலவு தனி. பணவிடை மூலம் அல்லது வரைவோலை மூலம் கட்டணங்கள் அனுப்பலாம்.

விவரங்களுக்கு:

பதிப்புத்துறை இயக்குநர்,

தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்-613001.

---

## “செந்தமிழ்ச் செல்வி”

| ஆண்டுக் கையொப்பம் | | வாழ்நாள் கையொப்பம் | |
|---|---|---|---|
| உள்நாடு ரூ. | 20 - 00 | உள்நாடு ரூ. | 200 - 00 |
| வெளிநாடு ரூ. | 80 - 00 | வெளிநாடு ரூ. | 600 - 00 |